

காத்திருக்கும் கூட்டம்

மனு பெறும் முதல்வர்

# முதல்வரிடம் மனு

ஒவ்வொரு திங்கட் கிழமையும் சென்னை கோட்டை திருவிழாக் கோலம் பூணுகிறது. அழுக்கடைந்த கிழிந்த உடைகளுடனும், நம்பிக்கையை வெளிப்படுத்தும் கண்களுடனும், எண்ணெய் காணாத தலைகளுடனும் ஆயிரக்கணக்கான ஏழை, எளிய மக்கள் கையில் மனுக்களுடன் கோட்டையை முற்றுகையிடுகின்றனர். பட்டா, முதியோர் பென்ஷன், வேலை வாய்ப்பு, ரேஷன் கார்டு, என்று விதவிதமான கோரிக்கைகள். முதல்வரைச் சந்தித்து மனுவைக் கொடுத்து விட்டால் எப்படியும் காரியம் நடந்து விடும் என்ற எதிர்பார்ப்பு.

போலியோவால் பாதிக்கப்பட்ட அப்துல் ரஹ்மான் வேலை வாய்ப்பு வேண்டி மனு கொடுக்கக் காத்துக் கொண்டிருக்கிறார். ''முதல்வர் எனக்கு வேலை கொடுக்கவில்லை என்றால் வேறு யாராலும் முடியாது'' என்று சொல்கிறார். கும்மிடிபூண்டியிலிருந்து வந்திருக்கும் மீனா, ''காரியம் நடக்காவிட்டால் பரவாயில்லை; ஒரு தடவை அந்தம்மாவைப் பக்கத்திலிருந்து பார்த்தா போதுங்க'' என்கிறார்! இப்படிப் பலர். வேலையில்லா இளைஞர்கள் மனுக்கள் எழுதிக் கொடுத்தே சம்பாதிக்கின்றனர்! மதியம் முதலே மனுக்களுடன் காத்திருக்கும் மக்களுக்கு, சாம்பார் சாதம், புளி சாதம் பாக்கெட்டுகள், அரசு செலவில் விநியோகமாகின்றன.

இதுவரை கிட்டத்தட்ட 20,000 பேரிடம் மனு வாங்கியிருக்கிறார் முதல்வர். மூன்று மணி நேரத்தில் 8000 பேரிடம் மனு வாங்கும் இயந்திரமாகச் செயல்பட்டிருக்கிறார். தமிழக அரசின் அறிக்கையோ ''புரட்சித் தலைவி, ஊனமுற்றவர்களோடும், விதவைகளோடும், மனுக்களைக் கொண்டு வந்த இதர மக்களோடும், பரிவுடன் பேசி மனுக்களைப் பெற்றுக் கொண்டார்'' என்று சொல்கிறது. சராசரியில் ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்படும் ஓரிரு வினாடிகளில் இது எப்படி சாத்தியமாகும்?

கூட்டத்தைக் கட்டுப்படுத்தத் தற்போது மாவட்ட வாரியாகத் தேதி கொடுத்திருக்கிறார்கள்.

கலைஞரும், எம்.ஜி.ஆரும் கூட மனுக்களைப் பெற்றுக் கொண்டதுண்டு. ஆனால் எந்தவிதமான விளம்பரமும் கிடையாது. அதனால் கூட்டமும் குறைவாகவே இருக்கும். இப்போதோ மனு வாங்குவதே ஒரு சாதனை போல் ஆகி விட்டது!

ஹெக்டே கர்நாடக முதல்வராக இருந்த போது அதிகாலை வாக்கிங் போய் விட்டு வந்த கையோடு வீட்டெதிரே கியூவில் நிற்கும் மக்களிடம் வரிசைப்படி மனுக்களைப் பெற்றதுண்டு. அரை மணி நேரம் மட்டுமே இப்படிச் செலவிடுவார். மனுவைப் பெற்ற கையோடு, ''இது அரசு செய்ய வேண்டிய காரியமில்லை'' என்று கூறி, திருப்பித் தந்து விடுவார். அல்லது கோரிக்கையில் நியாயமிருப்பின் அங்கேயே மனுவில் ஒரு குறிப்பெழுதி, உடன் நிற்கும் அதிகாரியிடம் தந்து, சம்பந்தப்பட்ட இலாக்காவுக்கு அனுப்பச் சொல்வார். இங்கேயோ மனுக்களைக் கவனிக்கவென்றே ஒரு புதிய இலாக்கா உருவாக வேண்டும் போலிருக்கிறது!

"முதல்வரிடம் கொடுக்கப்படும் மனுக்கள் பெரும்பாலும் மாவட்ட அளவி லேயே, தீர்க்கப்பட வேண்டிய பிரச்னை களைப் பற்றியவைதான். பட்டா, முதியோர் பென்ஷன், ரேஷன் கார்டு, இவையெல் லாமே தாசில்தார் மட்டத்தில் தீர்க்கப்பட வேண்டியவை. தவிர ஒவ்வொரு திங்களும் மாவட்ட ஆட்சியாளர் மனுக்களைப் பெற் றுக் கொள்கிறார். அவரைச் சந்தித்துப் பிரச்னைகளை விளக்கலாம். இப்படி யிருக்க, முதல்வர் மூன்று மணி நேரம் இதற்காகச் செலவழிப்பது அநாவசியம். ஆனால் பாதுகாப்பு வளையத்திற்குள் இருக் கும் முதல்வர் மக்களுடன் உள்ள தொடர்பு அறுபட்டதன் காரணமாக, இதுபோன்ற நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார்'' என்றார் மூத்த அதிகாரி ஒருவர்.

சமீபத்தில் ஓய்வுபெற்ற ஐ. ஏ. எஸ். அதிகாரி வேதநாராயணன், ''பல பிரச் னைகள் மாவட்ட அளவில் தீர்க்கப்பட வேண்டியவை என்பது உண்மைதான். ஆனால் வழக்கமான சிவப்பு நாடா மெத்த னத்தால் தாமதங்கள் வாடிக்கையாகி விட்டன. இந்த நிலையில் பொது மக்களின் மனுக்கள், 'நடவடிக்கை உடனடியாக எடுங்கள்' என்ற முதல்வர் அலுவலகக் குறிப்

---

புடன் மாவட்ட நிர்வாகத்துக்குச் சென்றால், வேலை விரைவாக நிறைவேற வாய்ப்பு இருக்கிறது. மேலும் முதல்வர் மூலமாக மக்களுக்கும், அரசுக்கும் இடையே ஒரு நல்ல 'rapport' உருவாகிறது'' என்கிறார். 'சில நிலப் பிரச்னைகள் கோட்டையிலேயே முடிவெடுக்க வேண்டியதாக இருக்கும். அவைகளில் சீக்கிரம் முடிவெடுக்கலாம்' என்கிறார் அவர்.

ஆக, 'முதல்வரிடம் மனு தந்தால்தான் காரியம் நடக்கும்' என்ற கருத்தைச் சிவப்பு நாடா உருவாக்கியுள்ளது தெளிவு. இது ஆரோக்கியமான அரசியல் அல்ல. இந்த நிலையை மாற்ற முற்படுவதற்குப் பதில் முதல்வரே எல்லா மனுக்களையும் பெறுவது இதர பல முக்கிய விஷயங்களில் கவனம் செலுத்த அவர் செலவிட வேண்டிய நேரத்தினைப் பங்கு பிரிப்பதாக அமைகிறது. அது மட்டுமல்ல, மக்கள் தங்கள் அருகாமையில் உள்ள மாவட்டத் தலைநகரிலேயே தீர்வு காண வேண்டிய பிரச்னைக்கு. அவர்களை உடல் கஷ்ட, பண நஷ்டங்க ளுக்கு உள்ளாக்கி மாநிலத் தலைநகர் வரை பயணம் செய்ய வைப்பது எப்படிச் சரியாகும்? இதனால் எத்தனை மனித மணி நேரம் வீணாகிறது! போக்குவரத்தில் விரயமாகும் தொகை எவ்வளவு!

''ஒரு மனு, இரண்டு மனு என்றால் முதல்வர் அலுவலகக் குறிப்புடன் மாவட்ட நிர்வாகத்துக்கு வந்தால் உடனே நடவடிக்கை எடுப்பார்கள். ஆனால் ஆயிரக் கணக்கில் வந்தால்...? வழக்கமான மெத்தனம்தான் தலைதூக்கும். முதல்வர் அலுவலகத்திலிருந்தும் தொடர்ந்து கண்காணிக்க முடியாது. போதாததற்கு முதல்வரிடம் மனு கொடுத்த மக்கள், தாசில்தார் அலுவலகத்திற்குச் சென்று விசாரித்தால், 'பெரிசா முதல்வர்கிட்டே போயிட்டயே, போ. அவுங்களையே போய்ப் பார்!' என்று பணியாளர்கள் எரிந்து விழ வாய்ப்புண்டு'' என்று எடுத்துக் காட்டினார் உயர் பதவி வகிக்கும் ஓர் அதிகாரி.

எனவே முதல்வரே ஏகப்பட்ட பப்ளிசிடியுடன் மனு வாங்குவதற்குக் காரணம் தமது செல்வாக்கை வளர்த்துக் கொள்ள என்று முடிவுக்கு வர வாய்ப்பிருக்கிறது. இதற்கு ஏற்றாற்போல் கோட்டையில் மனு வாங்குவது போதாதென்று சனிக்கிழமைகளில் கட்சி தலைமையகத்திலும் மனுக்களைப் பெறுகிறார் ஜெ. கட்சித் தகராறுகள் பற்றி மட்டும் இல்லாமல், இங்கேயும் பட்டா, பென்ஷன், போன்ற கோரிக்கைகளுடன் மனுக்கள் வருகிறதாம். ''மந்திரிகளின் உதவியாளர்களை இங்கேயே வரவழைத்து, மேல் குறிப்புடன் சம்பந்தப்பட்ட இலாக்காவுக்கு மனுக்களை அனுப்ப இருக்கிறோம்'' என்று சொல்கிறார் கட்சி நிர்வாகி ஒருவர். ஏற்கெனவே, ஆட்சிக்கும், கட்சிக்கும் இடையில் தூரம் குறைந்து கொண்டே வருகிறது. போகிற போக்கைப் பார்த்தால் கட்சிக்கும் ஆட்சிக்கும் வித்தியாசமே இல்லை என்ற நிலை தோன்றி விடும் போலிருக்கிறது!

- ப்ரியன்

# METEORIC GROWTH

Deposit your savings with Wall Street Finance and earn attractive returns.




The Symbol of Trust

## WALL STREET FINANCE LTD.

(A MEMBER OF THE Rs. 300 CRORES PATEL ROADWAYS GROUP)

***AS SAFE AS A BANK. WITH HIGHER RETURNS.***

For more details and FD applications forms contact : **MADRAS** : A-Mount Chambers, 758 Mount Road, Madras 600 002. Tel : 860693. • **BANGALORE** : No.3, House of Lords, St. Mark's Road, Bangalore 560 001. Tel : 214300. • **TRICHUR** : 287/12, Leema Complex, Shornur Road, Trichur 680 001. Tel : 40069. • **MADURAI** : 8, Yanaikkal, Kalpalam Road, Madurai 625 001. Tel : 27117, 26988 • **GOA** : M.G. Road, Opp. Azad Maidan, Panjim, Goa 403 001. Tel : 44117. • **BOMBAY** : 21, Lakozy Mansion Chowpatty Seaface, Bombay 400 007. Tel : 3633254/71, 3612701. F.D. Application forms also available at all Patel Roadways branches.

The particulars as required under Rule 3 of the Rles are contained in Company's Deposit Application Form.
This abridged advertisement appears further to the statutory advertisement published by the company in the independent and Maharashtra Times dated 24th December, 1990.
This abridged advertisement is issued in pursuance of Order No. 7/16/91-CL X dated 5th July, 1991 of the Department of Company Affairs, Government of India granting partial exemption to the Company from complying with the provisions of Section 58A(7)(b) of the Companies Act, 1956 read with Rule 3(2) of the Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules 1977.

ARM/S/WSFL/60-D/92



# சீவலப்பேரி பாண்டியைப் பிடித்தவர்,

''ஹலோ போலீஸ் கமிஷனரா?... ஐயா, நான் தாம்பரத்துக்குப் பக்கத்துலே இருந்து பேசறேன். எனக்கு ஏராளமான பிரச்னைகள். பாதுகாப்பே இல்லை! தயவு பண்ணி.....''

''நீங்க யாரும்மா? பேரு, விலாசம் என்ன?.... பக்கத்தில இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்ல போய்ச் சொல்லலியா?''

''ஐயா, நான் வயசானவ. நீங்கதான் போலீஸ் கமிஷனர் ஆச்சே. உங்களாண்ட சொன்னாத்தான் நடக்கும்னு......''

சென்னை போலீஸ் கமிஷனர் ஆர். ராஜகோபாலன் அவளுக்குப் பரிவாகப் பதில் சொல்லிச் சமாதானம் செய்கிறார். அடுத்து, அந்தப் பெண்மணி இருக்கும் பகுதியைச் சேர்ந்த இன்ஸ்பெக்டரிடம் போனில் பேசி, நேரில் அவரைச் சந்தித்து உதவும்படி கேட்கிறார். நம்மிடம் திரும்பி, ''அந்த அம்மாவுக்குப் பாவம், என்ன கஷ்டமோ! நான் இங்கே சென்னை நகர கமிஷனர்தான். ஆனாலும் என்னை நம்பி போன் செய்கிற போது, அவருக்கு உதவுவதுதான் மனிதாபிமானம். இல்லையா?'' என்கிறார்.

வெளிப் பார்வைக்குக் கண்டிப்பானவராக இருந்தாலும், உள்ளே மிருதுவான இதயம். ''இரவு சுமார் ஒரு மணிக்குப் படுக்கப் போய், காலையில் ஆறு மணிக்கு எழுந்திருந்தால் குளியல்-பூஜை எல்லாம் முடிய ஏழு மணி. எட்டு மணி வரை அன்றாட நிலவரம் பற்றி அதிகாரிகளுடன் ஓர் அலசல். பிறகு ஏதாவது ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்குத் திடீர் விஜயம். அடுத்து, கலவரம், கலாட்டா அல்லது குற்றம் நடந்த இடத்தைப் பார்வை இடுவது. அப்புறம் அலுவலகத்துக்கு வந்தால் நூற்றுக் கணக்கான பார்வையாளர்களைச் சந்திப்பது...... இதுதான் டெய்லி ரொடீன்'' என்கிறார் ராஜகோபாலன். (கிறிஸ்துவ கன்யாஸ்த்ரீகளும், டஜன் கணக்கான நபர்களும் பல பிரச்னைகளுடன் காத்திருக்கிறார்கள் - நாம் போன போது.)

லயோலா கல்லூரி மாணவராயிருந்த ராஜகோபாலனுக்கு, சமஸ்கிருதம் இரண்டாவது மொழி. கர்நாடக இசையில் அசாத்திய ஈடுபாடு. மகள் சுதா (முதலாண்டு எம்.பி.பி.எஸ்.), டான் பாஸ்கோவில் படிக்கும் மகன் அருண் - இருவருமே முறையாகக் கர்நாடக இசை பயிலுகிறார்கள். (''இந்த ஆண்டு திருவையாறில் ஆராதனையில் கூடப் பாடினார்கள்.'') மனைவி ராதா

ராஜகோபாலன், குழந்தைகள் வைத்திய நிபுணர். அப்போலோ மருத்துவ மனையில் பணியாற்றுகிறார்.

'71 ல் பெங்களூரில் திருமணம் நடந்த போது, அமெரிக்காவில் மருத்துவராகப் பணியாற்றிக் கொண்டிருந்த ராதா, அங்கே இருந்த பதவியையும், நிலையான அமெரிக்க சொகுசு வாழ்க்கையையும் விட்டு விட்டு இங்கே வந்து சேர்ந்தார்.

**ரா**ணுவத்தில் காப்டனாகப் பணி புரிந்து விட்டு, ஐ. பி. எஸ். தேர்வில் தேறியவர் ராஜகோபாலன். முதுகளத்தூர், கரூர், சேலம் என்று சில இடங்களில் துணை போலீஸ் சூபரின்டென்டென்ட்டாகப் பணியாற்றிய பிறகு, மத்திய அரசின் கேபினட் செக்ரடேரியட்டில் இரண்டரை வருடங்கள். ('ஆர்மியில் இருந்ததால் சரளமாக இந்தி பேச வரும். ஆக பிரச்னையே இல்லை!')

சர்க்காரியா கமிஷன் விசாரணை செய்த போது, நாலு வருடங்கள் சி.பி.ஐ.யின் சூபரின்டென்டென்ட். ('பரபரப்பான வருடங்கள்!') அதன் பிறகு மத்தியிலும் மாநிலத்திலும் மாறி மாறிப் பல்வேறு பதவிகள்.

**மி**ன்வாரியத்தில் கண்காணிப்பு ஐ. ஜி.யாகப் பதவி வகித்தால் பிரமாதமாக என்ன செய்துவிட முடியும் என்று சாதாரணமாகத் தோன்றும். ''600 க்கு மேற்பட்ட ஃபயர் மான்யுவல்கள் தயார் செய்திருக்கிறேன். பல கோடி ரூபாய்கள் செலவழித்து உருவாக்கும் பெரிய பெரிய தெர்மல், ஹைட்ரோ பிளான்ட்களில், நெருப்பு எப்படிப் பிடிக்கிறது, 'பிடித்தாலோ, பிடிக்காமல் இருக்கவோ, என்னென்ன செய்ய வேண்டும் என்று முழுக்க ஆராய்ந்து, தயாரிக்கப்படுவதுதான் ஃபயர் மான்யுவல். எண்ணூர், தூத்துக்குடி, மேட்டூர், நீலகிரி, பாபநாசம் மின் நிலையங்களில் எல்லாம் இதுதான் நடைமுறையில் இருக்கிறது!'' என்கிறார் ராஜகோபாலன், எந்தப் பதவியில் இருந்தாலும் ஈடுபாட்டுடன் செயல்பட்டால் சாதனை புரியலாம் என்று உணர்த்துவது போல.

**சி.**பி.ஐ.யில் இருந்த போது, வங்கி டிமாண்ட் டிராஃப்ட்களைத் திருடி, வங்கிகளில் கணக்கு வைத்துக் கொண்டு, அவற்றைப் பணமாக்கும் கும்பலைக் கும்பகோணத்தில் கொத்தாகப் பிடித்தார்; '73ல் என்ஃபோர்ஸ்மென்ட் டைரக்டரேட்டில் இவர் துணை இயக்குநராகக் கோழிக்கோட்டில் இருந்த போது, அந்தப் பகுதியில் ஒரு சிலர் ஹவாலா பரிவர்த்தனையில் ஈடுபட்டிருந்தனர். ஷோரனூரிலிருந்து பணத்தை எடுத்துக் கொண்டு ஒரு பார்ட்டி பஸ்ஸில் புறப்பட்டிருக்கிறான் என்ற 'டிப்' கிடைத்ததும், அதே பஸ்ஸில் அவனுக்குத் தெரியாமலே பின் தொடர்ந்தார். கோழிக்கோட்டுக்கு அருகே உள்ள அவனுடைய கிராமத்தில் பஸ் நின்றபோது அவன் இறங்கினான். சட்டென்று ராஜகோபாலனும் பஸ்ஸிலிருந்து இறங்கி அவனைப் பிடித்தார். சில லட்ச ரூபாய்கள் உள்ள சூட்கேஸுடன் பிடிபட்டான் அவன்!

ராஜகோபாலன் திருநெல்வேலி எஸ்.பி. யாக இருந்த போதுதான் முன்சீப்பைக் கொன்ற ''புகழ்பெற்ற'' கொள்ளைக்காரன் சிவலப்பேரி பாண்டியைப் பிடித்தார். சிவலப்பேரி பாண்டியைத் தூக்கிலிட்டுக் கொல்ல, தண்டனை வழங்கப்பட்டது. திருநெல்வேலிக்குக் கொண்டு வரும்போது, ஊருக்கு வெளியே, மறுபடி தப்பிக்கப் பார்த்தான் பாண்டி. சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் அவனைப் பிடிக்க முயன்ற போது அவரையும் தாக்கிவிட்டு வயலில் ஓடினான். அவனைத் தப்பியோட விடாமல் சுட்டுவிட, குண்டடிபட்டுச் சாய்ந்தான் பாண்டி.

## ாலைப் போக்குவரத்தையும் சீரமைக்கிறார்!

குடியரசுத் தலைவர் பதக்கம், மிகச் சிறந்த சேவைக்கான பதக்கம், ராணுவ சேவைப் பதக்கம் என்று நிறையவே மெடல்கள் வைத்திருக்கிறார். போதாதற்கு, சென்னைப் பல்கலைக் கழக எம். பி. ஏ. இப்போதும் பாண்டிச்சேரி பல்கலைக் கழக மாணவர்!

''**இ**ன்று வி.ஐ.பி.க்களுக்குப் போதிய பாதுகாப்பளிப்பது எனக்கு முக்கியமான பணி. தவிர திருட்டுக்களைக் கண்டுபிடித்து, அவரவரிடம் பொருட்களைத் திரும்பக் கொடுப்பது; சாலைப் போக்குவரத்துச் சீரமைப்பு என்று ஒரு பட்டியல் வைத்திருக்கிறேன். அவற்றை நிறைவேற்றச் செயல்படுகிறேன்'' என்கிறார் ராஜகோபாலன்.

''போலீஸ் நியாயமாக நடந்து கொள்ள வேண்டும். பாரபட்சமில்லாமல் இயங்க வேண்டும். விடுதலைப் புலிகள் விஷயத்தில், நிலைமை இப்போது கட்டுக்கடங்கி இருக்கிறதென்றால், அதற்குக் காரணம், முதல்வரின் முழு சப்போர்ட்டும் போலீசுக்கு இருப்பதுதான்...'' என்கிறார் அழுத்தமாக.

- சாருகேசி

புகைப்படம் : ராஜன்

சேப்பாக்கம் மைதானத்தில் 'நெட் பிராக்டிஸ்' முடித்து, வியர்வை அரும்பிய முகத்துடன் வரும் டபுள்யூ. வி. ராமன், எம். சி. சி. ஆபீஸை ஒட்டிய பகுதியில், பிரம்பு நாற்காலியைச் சௌகரியமாய் இழுத்துப் போட்டுக் கொண்டு, இன்னொரு நாற்காலி மீது கால்களை நீட்டியபடி சாய்ந்து கொண்டு, சில நிமிடங்கள் கண்ணை மூடிய படி இருக்கிறார். பிறகு, கைக்குட்டையால் முகத்தைத் துடைத்தபடி, 'எஸ்' என்று நம் முடன் பேசுவதற்குத் தயாராகிறார், தமிழக கிரிக்கெட்டின் இளம் புயல் என்று புகழப் படும் டபுள்யூ. வி. ராமன் என்ற ஊரூரி வெங்கடராமன். ஊரூரி அவர் சொந்த ஊர். கர்நாடகாவில் இருக்கிறதாம்.

ஆறு அடி இரண்டு அங்குலம். கொஞ்சம் ஒல்லியான தேகம். ஆனால் இந்த உடம்புக்கு எத்தனை வலிமை என்பது ராம னின் பாட்டிங்கைப் பார்க்கும் போது நமக்குப் புரிகிறது. இவர் ஒரு இடது கை பாட்ஸ்மென். எழுதுவது கூட இடது கையால்தான். சமீபத்திய ரஞ்சித் கோப்பை மாட்ச்களின் போது, குறிப்பாக அரையிறுதி யாட்டத்தின் போது ஒரு இன்னிங்ஸில்



☛ ராமன் : பிரகாசமான எதிர்காலம்

# ரன்களைக் குவிக்கும் ராமன்!

இரட்டைச் சதமும், அடுத்ததில் சதமும் விளாசித் தள்ளி ரன்கள் குவித்த ராமன், கிரிக்கெட் ஆடத் தொடங்கியது ஆறாவது வகுப்பில் படிக்கும் போது.

பள்ளிக்கூடத்தில் படித்த நாட்களில் இவர் கிரிக்கெட் மட்டுமின்றி வாலிபால், டேபிள் டென்னிஸ் என்று பலவற்றிலும் ஆர்வம் காட்டியவர். ஆனால் நாளடைவில், மற்றவற்றை விட்டு விட்டு, கிரிக்கெட்டி லேயே முழுக் கவனத்தையும் செலுத்தத் தொடங்கினாராம், இந்த முந்நாள் இந்து ஹைஸ்கூல் மாணவர்.

''நான் தேனாம்பேட்டையில் இருந்த கிராண்ட் ப்ரீ கிரிக்கெட் கிளப்பில் மெம்பர். அங்கே கட்டுப்பாடுகள் அதிகம்; பயிற்சியும் கடுமையானது. என் கிரிக்கெட் வாழ்க் கையில் நன்றியுடன் நான் நினைத்துப் பெரு மைப்படுவது எனக்குக் கிரிக்கெட் கற்றுக் கொடுத்த கிளப்பைத்தான்'' என்கிறார் ராமன்.

ராமன், ஏதோ ஒரே நாளில் அதிர்ஷ்டக் காற்று அடித்து, மேலே வந்து, பலருடைய கவனத்தையும் கவர்ந்து விடவில்லை. ''ஐந்தாவது டிவிஷன் லீக் மாட்ச்களில் ஆடி, என் திறமையைக் காட்டி, பின்னர் நான் காவது டிவிஷனில் ஆடி, அதன்பின் மூன்றா வது டிவிஷன், இரண்டாவது டிவிஷன், முதல் டிவிஷன் என்று படிப்படியாய் முன்னேறினேன். முதலில் பதினைந்து வய துக்குட்பட்டவர்கள் டீமில் இடம்பெற் றேன். அதன்பின் பத்தொன்பது வயதுக்குட் பட்டவர்கள் டீமில் ஆடினேன். தொடர்ந்து இருபத்திரண்டு வயதுக்குட்பட்டோர் அணி, இருபத்தைந்து வயதுக்குட்பட்டோர் அணி இவற்றில் ஆடியிருக்கிறேன். இப்போது ரஞ்சி ஆடுகிறேன், இந்திய அணியிலும் ஆடியிருக்கிறேன்...'' என்கிறார் ராமன்.

''உங்களுடைய டெஸ்ட் கிரிக்கெட் பிரவேசம் வெற்றிகரமாய் அமையாமல் போனதற்கு என்ன காரணம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?''

''மிகப் பிரமாதமான முறையில் என் திறமையை நான் நிரூபிக்கவில்லை என்றா லும் கூட, என் டெஸ்ட் கிரிக்கெட் பிரவே

சத்தை ஃபேவரிவியர் என்று நான் கூற மாட்டேன். 87-88ல் வெஸ்ட் இண்டீஸுடன் ஆடிய இந்திய அணியில் நான் இடம்பெற்றிருந்த போது, டெஸ்ட் மாட்ச்களிலும் சரி, ஒருநாள் கிரிக்கெட் போட்டிகளிலும் சரி நான் கணிசமான ரன்கள் எடுத்திருக்கிறேன்.''

''அப்புறமும், தொடர்ந்து நீங்கள் இந்திய அணியில் இடம்பெற முடியாமல் போனதற்கு என்ன காரணம்?'' என்ற நம் கேள்விக்கு, ராமன் கொஞ்சம் யோசித்து விட்டு, நிதானமாய் வெகு சாமர்த்தியமான பதிலைச் சொல்கிறார். அவரது பதில் : ''என்னை விடத் திறமைசாலிகள் செலக்ஷன் கமிட்டியின் கண்களுக்குப் புலப்பட்டிருக்கலாம்.''

''இப்போதைய ரஞ்சி கோப்பைப் போட்டிகளில் உங்கள் திறமையை நிரூபித்திருக்கிறீர்களே! இது உங்களுக்கு, இந்திய அணியில் இடம்பெறக்கூடிய வாய்ப்பினைப் பெற்றுத் தரும் என நீங்கள் நினைக்கிறீர்களா?''

அழுத்தமான தொனியில், ''எஸ். எனக்கு இந்திய அணிக்குச் செல்லும் வாய்ப்புக்கள் பிரகாசமாய் இருக்கின்றன... வெயிட் அண்டு ஸீ'' என்கிறார் ராமன்.

''அண்மையில் நடந்த உலகக் கோப்பைப் போட்டியில், எந்த அணியின் ஆட்டத்தை நீங்கள் வெகுவாக ரசித்தீர்கள்?''

''இங்கிலாந்து அணியின் ஆட்டத்தை, திறமையும், அனுபவமும் நிறைந்த இங்கிலாந்து அணிதான் பலமானது என்பது என் கருத்து. நான் வெற்றி, தோல்வி முடிவை வைத்து இதைச் சொல்லவில்லை.''

''இந்திய அணியின் பரிதாபகரமான தோல்விக்கு என்ன காரணம்?''

''அதிர்ஷ்டமின்மைதான். வேறு என்ன சொல்ல முடியும்? ஆஸ்திரேலியாவுடன் ஆடிய போது, ஜெயித்திருந்தால் இரண்டு பாயிண்ட்டுகள் கிடைத்திருக்கும். ஸ்ரீலங்காவிடம் தோற்காமல் இருந்திருந்தால் இன்னும் இரண்டு பாயிண்ட்டுகள் கூடியிருக்கும். ம்.. இப்போது வருத்தப்பட்டு என்ன பலன்?''

'' 'ரஞ்சி'யில் விளையாடும் தமிழ் நாட்டு அணியின் பலம் என்ன? பலவீனம் என்ன?''

''ஒரு மாணவன் இருக்கிறான். அதி புத்திசாலி என்று எல்லோரும் அவனைச் சொல்வார்கள். ஆனாலும் பரீட்சை என்று வரும் போது, நூற்றுக்கு நூறு வாங்கி அவன் தன் திறமையை நிரூபிக்க வேண்டுமல்லவா? அப்படிச் செய்யாவிட்டால் திறமை இருந்து பயன் என்ன? அதே போன்ற நிலைமைதான் தமிழ்நாடு அணிக்கும். தமிழ்நாட்டிலே இருப்பது போல, பிரமாதமான கிரிக்கெட் திறமையை வேறு எந்த மாநிலத்திலும் பார்க்க முடியாது. ஆனாலும் ஒரு போட்டி என்று வந்தால் நாம் முழு உத்வேகத்துடன் ஒழுங்கு, கட்டுப்பாட்டுடன் விளையாடுவது இல்லை. இதுதான் இன்றைய நிலைமை.

''ரஞ்சி கோப்பை அரை இறுதியில் பாட்ஸ்மன் என்ற முறையில் நீங்கள் முத்திரை பதித்தாலும், கேப்டன் என்ற முறையில் திருப்திகரமாய்ச் செயல்படவில்லை. என்னதான் வெற்றி பெறுவது உறுதி என்ற நிலை இருந்தாலும் கூட, ரசிகர்களுக்கு நல்லதொரு மாட்சைக் கண்டுகளிக்கும் வாய்ப்பைத் தர வேண்டும் என்ற காரணத்துக்காகவாவது, நீங்கள் மாண்டேடரி ஓவர்கள் முழுதும் ஆடி ஒரு தீர்மானமான வெற்றிக்கு முயன்றிருக்க வேண்டும்' என்று விமர்சனம் எழுந்ததே. அதுகுறித்து?''

''ஒரு கேப்டனின் நோக்கம், தன் அணி ஜெயிக்க வேண்டும் என்பதாகத்தானே இருக்கும். தமிழ்நாடு





## ராமன்

- ராமன் சென்னை புதுக் கல்லூரி மாணவர். படித்தது பி. ஏ. கார்பரேட் செகரட்டரிஷிப்.
- தற்போது ராமன் பணிபுரிவது எம். ஆர். எஃப். நிறுவனத்தில் - மார்க்கெட்டிங் பிரிவில்.
- பிடித்த கிரிக்கெட்டர்கள் : கபில், சச்சின், விஸ்வனாத்.
- பிடித்த மற்ற விளையாட்டு : ஸ்நூக்கர்.
- பொழுதுபோக்கு : நாவல்கள் படிப்பது.
- பிடித்த எழுத்தாளர் : ஜெஃப்ரி ஆர்ச்சர்.

அணி, முதல் இன்னிங்ஸ் 'லீட்' எடுத்ததன் மூலம் அரை யிறுதியில் வெற்றி பெறுவது உறுதியாகி விட்ட நிலையில், ஆடியது போதும் என்று முடிவு செய்ததில் தவறு ஏதுமில்லை. ஒரு வேளை என் நிலைமையில் ஹரியானா அணியின் கேப்டன் இருந்திருந்தாலும் கூட அதையேதான் செய்திருப்பார். இன்னொரு முக்கிய காரணம், அரை யிறுதி ஆட்டத்தின்போதே, என் அணியின் இரண்டு ஆட்டக்காரர்கள் அடிபட்டு, ஆட முடியாத நிலைமை. நாம் தொடர்ந்து ஆடி யிருந்தால், இன்னும் யாராவது ஒரிருவருக்கு அடிபட்டு, அவர்களும் ஆட முடியாது போனால், இறுதியாட்டத்தில் நம் அணி வெல்வது சிரமமாகி விடாதா?''

''சரி! இவ்வாண்டு, ரஞ்சி கோப்பையை வெல்வதற்குத் தமிழ்நாட்டிற்குச் 'சான்ஸ்' இருக்கிறதா?'' (இந்தக் கேள்வியை நாம் கேட்டது, ராமன் அரையிறுதியில் வென்ற பின், சென்னை திரும்பிய சமயத்தில். இன்னும் சில தினங்களில் இறுதிச் சுற்றில் ஆட வேண்டிய சூழ்நிலை)

சிறிது நேரம் யோசித்து விட்டு, ராமன் சொல்கிறார் ''ஃபிப்டி... ஃபிப்டி''

''எதை வைத்து இந்தக் கணக்கு?''

''டெல்லி அணியும், நாமும் சம வலிமை படைத்தவர்கள். எனவே முடிவு எப்படியும் இருக்கலாம்.''

''உங்களுடைய லட்சியம் என்று...''

''1989ல் ரஞ்சி கோப்பை செமி ஃபைனல்ஸில் வங்காளத்துடன் ஆடிய போது முதல் இன்னிங்ஸில் நான் அடித்தது 238 ரன்கள். அந்த ரஞ்சி தொடரில் நான் மொத்தம் எடுத்தது 1018 ரன்கள். இதன் மூலம் நாற்பத்தைந்து வருட ரஞ்சி கோப்பை சாதனையை முறியடித்தேன். மறுபடியும் என் ரெக்கார்டை நானே முறியடிக்க ஒரு வாய்ப்புக் கிடைக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன்.''

''விஷ் யூ ஆல் தி பெஸ்ட்!''

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி
அட்டை வண்ணப்படம் : யோகா
படங்கள் : கே. என். சாரி

---

## மரங்களின் டாக்டர்!

யமானோ டடாஹிகோ (Yamano Tadahiko) 81 வயது ஜப்பானியர். கடந்த முப்பது வருடங்களாக இவர் மரங்களுக்கு மருத்துவம் செய்து வருகிறார். சுமார் ஆயிரம் மரங்களுக்குச் சிகிச்சை அளித்திருக்கிறார்.

வயதான மரங்களின் பொந்துகள், உடைந்த கிளைகள் போன்றவற்றைச் சிகிச்சை அளித்துக் குணப்படுத்துகிறார் யமானோ. முதலில் மரத்தின் வேரை ஆராய்ந்து, அதன் தண்டுப் பகுதியில் ஓர் ஊசி போடுகிறார். தேவையானால் அடிபட்ட பகுதியை 'ஆபரேஷன்' செய்து நீக்கி, காயத்தைச் சுத்தப்படுத்தி மருந்து தடவுகிறார்.

மரங்கள் மனித ஆன்மாக்களின் இருப்பிடங்கள் என ஜப்பானியர்கள் நம்புகிறார்கள். ''மரங்களைத் தொடும் போது என் உள்ளம் தூய்மையாகிறது'' என்கிறார் யமானோ. சிகிச்சையை ஆரம்பிக்கும் முன்னர் மரத்திடம் கனிவாகப் பேசி, இறைவனை வணங்கிக் கொள்ளும் யமானோ தமது 'பேஷன்டு'களைப் பல வருடங்களுக்குப் பிறகு சென்று பார்த்து மகிழ்வதும் உண்டு. அச் சமயங்களில் ''பழைய நண்பரைப் பார்க்கும் சந்தோஷம் கிடைக்கிறது...'' என்கிறார்.

- நியூ ஸ்ட்ரெய்ட்ஸ் டைம்ஸ்





பந்து வீச்சு கன இறுக்கமாகப் போடணும்னால்
மற்ற எதுவும் தளராமல் இருக்கணும்!

VIP
CHAMP
ஹெர்ரிங்-போன்
எலாஸ்டிக்குடன்

இடுப்பில் நிலையாக
அமர்ந்திடும் ஜட்டி.

Avenues.HH 1273.92

# ஒரு புத்திசாலித்தனமான அடி



## ஐடிபிஐ

## முதலீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்து முதலீட்டு வரியில் ஆதாயம் பெறுங்கள்.

நிலம், கட்டிடம், ஆபரணங்கள், பங்குகள் போன்ற நீண்டகால முதலீட்டு ஆதாயத்திற்கு வருமான வரி உண்டு. இவ்வரியிலிருந்து விலக்கு பெற, உங்கள் முதலீட்டை முழுமையாக பெற மற்றும் இதிலிருந்து லாபமும் பெற ஐடிபிஐ முதலீட்டு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

- பத்திரங்கள் ஆண்டு முழுவதும் சம விலையில் கிடைக்கும்.
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு எண் 54 E ன் கீழ் முதலீட்டு ஆதாய வரிவிலக்கு.
- பிரிவு 80 L ன் கீழ் வருமான வரியில் லாபம்.
- செல்வ வரிச்சட்டம் 1957 பிரிவு எண் 5 (1) (XVIE) கூடவே பிரிவு 5 (1 A) ன் கீழ் ரூ. 5 லட்சம் வரை வருமான வரியில் லாபம்.
- வருடத்திற்கு 9% என்ற விகிதத்தில் 6 மாதத் திற்கு ஒரு முறை வட்டி வழங்கப்படும்.
- நான்-ரெஸிடெண்ட் இந்தியர்களின் முதலீடுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகளுக்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாக ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்போது கழிக்கப்பட மாட்டாது.
- வெளியூர் காசோலைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sobhagya/IDBI/91 Tam. Rev.

## நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் பெறும் பங்கு.



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபீசை அணுகுங்கள். அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்.

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், பம்பாய்-400 005. போன் : 218 9111/21.

# திடீர் திருமணங்கள்

ஞாயிற்றுக் கிழமை காலைகளில் டெல்லி கீர்த்தி நகர் சனாதன தர்ம மந்திர் கிட்டத்தட்ட ஷேர் மார்க்கெட் போல் காட்சி அளிக்கிறது! கூட்டம் நிரம்பி வழியும் இந்த அரங்கத்தின் மேடையில் கையிலே 'மைக்' பிடித்தபடி ஒருவர் நிற்கிறார். பிரும்மாண்டமான கரும்பலகையில் திருமணத்துக்காகக் காத்திருக்கும் வரன்களின் பெயர்கள், பதிவு எண்கள் எழுதப்பட்டுள்ளன. மாப்பிள்ளை தேடுவோர் அந்தப் பெயர்களையும் குறிப்புகளையும் படித்துவிட்டுத் தங்களுக்குப் பொருத்தமாய் அமையக்கூடிய நபரின் எண்ணை, மேடை மேல் நிற்கும் இளைஞரிடம் தெரிவிக்க, அந்த இளைஞர் மைக்கில் எண்ணைக் கூறுகிறார். அந்த எண்ணுக்குரிய 'மாப்பிள்ளையின்' பெற்றோர் கூட்டத்திலிருந்து பிரிந்து வந்து பெண்ணுக்கு உரியவரைச் சந்திக்கிறார்கள். இந்த வகையில் பல திடீர் கல்யாணங்கள் நிச்சயிக்கப்படுகின்றன!

இந்தப் புதுவிதமான 'கல்யாணக் கேந்திரத்தை' நடத்துபவர் ஷ்யாம் சுந்தர் கதூரியா என்ற சமூக சேவகர். ஆரம்பத்தில் (1978) தம் வீட்டிலேயே இந்தச் சேவையைச் செய்தவர் இடப் பற்றாக்குறை ஏற்படவே, பொது இடத்துக்கு மாறினார். இப்போது ஐம்பத்தோரு ரூபாய் பதிவுத் தொகை பெற்றுக் கொண்டு சனாதன தர்ம சபையே இச் சேவையைச் செய்கிறது.

இந்தக் கல்யாணக் கேந்திரத்தின் சுவர்களில் ஜாதி ஒழிப்பு, வரதட்சணை ஒழிப்பு கோஷங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

## ரஷ்யாவிலிருந்து வரும் நாய்கள்!

மாஸ்கோவிலிருந்து டெல்லி வரும் விமானங்களில் பயணம் செய்யும் இந்தியர்கள் பலர் உயர் ஜாதி நாய்களைத் தங்களுடன் எடுத்து வருகிறார்கள். இந்த நாய்கள் மாஸ்கோவாசிகளால் தானம் செய்யப்பட்டவை. ரஷ்யாவில் உள்ள பொருளாதாரச் சீர்குலைவு காரணமாக உணவு விலை ஏகமாக ஏறிவிட்டது. நாய்களை வைத்துக் காப்பாற்ற முடியாமல் வெளிநாட்டுப் பயணிகளிடம் கொடுத்து விடுகிறார்கள் ரஷ்யர்கள். இந்தியா எடுத்து வரப்படும் பல உயர் ஜாதி நாய்கள் கணிசமான தொகைக்கு இங்கே விற்கப்படுகின்றன!

வடக்கு வாசல் :

## கஸ்டம்ஸ் அதிகாரிகளுக்குக் கஷ்டம்!

அயல் நாடுகளிலிருந்து வருவோர் ஐந்து கிலோ தங்கம் கொண்டு வரலாம் என்று மன்மோகன் சிங் அறிவித்தாலும் அறிவித்தார், கஸ்டம்ஸ் அதிகாரிகளுக்குத் தான் நஷ்டம்! அவர்கள் கைப்பற்றும் கள்ளக் கடத்தல் தங்கத்தின் மதிப்பில் பத்து சதவிகிதம் இதுநாள் வரை அவர்களுக்கு ஊக்கத் தொகையாகத் தரப்பட்டு வந்தது. கள்ளக் கடத்தல் குறைந்தால் இவர்களுக்கு இந்த வருமானம் அம்பேல்!

## பசுமைப் புரட்சி முறை!

புது டெல்லியின் வி.ஐ.பிகள் வாழும் பகுதிக்குக் கிடைக்கும் வசதிகள் நகரின் வேறு பகுதிகளுக்கு இல்லை. தண்ணீர் வராத குழாய்கள், பவர் கட் என்று பல வகை அவஸ்தைகள் வி.ஐ.பி அல்லாதோருக்கு.... தலை நகரை விரிவுபடுத்தும் திட்டம் ஒருபுறம் இருந்தாலும், டெல்லியின் புறநகர்ப் பகுதிகளில் கிடைக்காத பல வரிச் சலுகைகளும், மானியங்களும் தலைநகரில் கிடைப்பதால் யாருக்கும் புறநகர்ப் பகுதிகளில் குடிபோகப் பிடிப்பதில்லை.

'டெல்லியைப் பசுமையாக்குவோம்' என்ற கோஷம் காரிய சித்தியாகிவிட்டது! ஆமாம் எல்லா DTC பஸ்களுக்கும் பச்சை வண்ணம் பூசப்பட்டிருக்கிறது! இதனால் அவை விடும் கரும் புகையின் நிறமும் விஷத் தன்மையும் மாறி விடுமா என்ன?

- முஸாஃபிர்

(ஹிந்துஸ்தான் டைம்ஸ்)

புஸ்... புஸ்...
சே! சட்டசபையில ரெண்டே கொசுக்கள் என்னைச் சூழ்ந்துகிட்டு பாட்டா படிக்குது... என்ன மருந்து அடிச்சாலும் ஒழிய மாட்டேங்குதே...?
ஜெயலலிதா
இந்தாங்க, நீங்கதான் சாம்பியன்...
இந்தாங்க, என்னை விட நீங்கதான் பெரிய சாம்பியன்!
நீ சரியான ராவணன்டா...! உன்னை ஒழிச்சுக் கட்டணும்...
நீதான்யா ராவணன்...! என்னை என்ன செய்துட முடியும்?
ராமஜென்ம பூமி
நல்ல வேடிக்கை! ரெண்டு பேருக்குமே ராமர்னு நினைப்பு...!

# போலீஸ் அரக்கர்கள்

லண்டனில் தலைமைச் செயலகத்துடன் "அனைத்துலக அபய ஸ்தாபனம்" செயல்படுகிறது. Amnesty International என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் இது, இவ்வாண்டு தனது அறிக்கையில் இந்தியாவில், போலீஸ் காவலில் உள்ள கைதிகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைப் பட்டியலிடுகிறது. அமைதி நிலவும் மாநிலங்களிலேயே காவல் கைதிகளிடம் போலீஸார் அக்கிரமமாக நடந்து கொள்கிறார்கள் எனில், பயங்கரவாதிகளை அடக்க வேண்டிய நிலையில் ராணுவமும், விசேஷ போலீஸும் அபரிமித அதிகாரங்களுடன் வளையவரும் மாநிலங்களில் கேட்கவே வேண்டாம். காவல் கைதிகள் இன்னும் அதிகமான துன்புறுத்தலுக்கு உள்ளாகிறார்கள்.

இந்த துன்புறுத்தல்களில் சித்திரவதை தவிர, கற்பழிப்பு போன்ற பயங்கரங்களும் உண்டு. போலீஸ் காவலிலேயே பல விசாரணை கைதிகள் இறந்தும் போகிறார்கள். 1985 தொடங்கி இன்று வரை இவ்வாறு 415 பேர்களாவது மரணத்தை சந்தித்திருப்பதாக அம்னஸ்டி அறிக்கை சுட்டிக்காட்டுகிறது.

இந்த அறிக்கை, பாரதத்துக்கும், பாரதத்தை வழிநடத்திச் செல்லும் பொறுப்பில் உள்ள தலைவர்களுக்கும் தலைகுனிவை உண்டாக்குகிறது என்பதில் ஐயமில்லை. ஆனால் இதை விடவும் பெரிய தலைகுனிவு என்னவெனில் மத்திய உள்துறை அமைச்சர் இந்த அறிக்கையை, "பராபரியாகக் கேள்விப்பட்ட தகவல்களின் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட அறிக்கை" என்று அலட்சியமாக ஒதுக்கித் தள்ளியிருப்பதுதான். இதற்குப் பதிலாக அவர், 'அம்னஸ்டி அறிக்கை எங்கள் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது; தவறுகள் நேரக் கூடாது என்பதே எங்கள் நோக்கம்; அதையும் மீறிச் சில அநீதிகள் நடந்திருந்தால் வருந்துகிறோம்; எதிர்காலத்தில் தவிர்க்க முயற்சி செய்வோம்' என்று கூறி இருந்தால் கௌரவமாக இருந்திருக்கும். ஏனெனில், போலீஸ் காவலில் இருக்கும் கைதிகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்குச் சாட்சியமாகச் சர்வதேச அபய நிறுவனத்தின் அறிக்கை நமக்குத் தேவையில்லை. நாமே நன்கு அறிந்ததுதான்.

உதாரணத்துக்கு இந்த அறிக்கை நாளிதழ்களில் இடம்பெறும் தினத்துக்கு முந்தின நாள் வந்துள்ள ஒரு செய்தியைப் பாருங்கள். வில்லிவாக்கத்தைச் சேர்ந்த நாகம்மாள், ரயில்வே சொத்தைக் களவாடியதாகக் கருதப்பட்டு ரயில்வே போலீஸால் இழுத்துச் செல்லப்பட்டாள். திருட்டுக் குற்றத்தை ஒப்புக் கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டாள். அவள் மறுத்த போது அவள் சேலை களையப்பட்டது. உள்ளாடைகளுடன் மட்டும் அவளை நிறுத்தி வைத்து பின்புறம் லத்தியால் அடித்திருக்கிறார்கள். ஒருமுறை இருமுறை அல்ல - ஐந்து நாட்களுக்கு! இத்தனைக்கும் அவள் களவாடியதாகக் கருதப்படும் ரயில்வே பொருள்களின் மதிப்பு வெறும் 270/- ரூபாய்தான்.

அம்னஸ்டி அறிக்கை வெளியான அன்றே, பீகாரில் போலீஸார் நிகழ்த்திய ஒரு கோர கிருத்தியமும் நாளிதழ்களில் இடம்பெற்றுள்ளது. அரிஜனங்களுக்குப் பாதை மறித்து சுவர் எழுப்பிய ஒரு நபர், அரிஜனங்கள் மீது பழி சுமத்திப் பொய்யான புகாரும் போலீஸாரிடம் தர, போலீஸார் இதுதான் சமயம் என்று இரு ஹரிஜன கிராமங்களில் புகுந்து 1500 வீடுகளைக் கொள்ளையடித்தனர். மக்கள் பயந்து வீடு வாசல்களைத் துறந்து ஓடினர். தாறுமாறாகப் போலீஸ் சுட்டதில் 13 பேர் காயமடைந்தனர். மூன்று பேர் மடிந்தனர்.

சர்வதேச அபய நிறுவனம் யதார்த்தத்தை எடுத்துக் காட்டியதற்காக அதற்கு நன்றி தெரிவிப்பதற்குப் பதில், அதனைக் குறைகூறும் மத்திய அரசை மக்கள் மன்னிக்க மாட்டார்கள். ஏனெனில் அபய நிறுவனத்தின் அறிக்கை இங்கு போலீஸ் காவலில் கைதிகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைக் குறைவாகவே மதிப்பிட்டுள்ளது, மிகைப்படுத்தியல்ல என்பது மக்களுக்குத் தெரியும்.





கல்கி

1992 ஏப்ரல் 5
மலர் : 50
இதழ் : 36
பிரஜோத்பத்தி பங்குனி 23



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

சார்மினார் சானல் :

# இசை மேதையாக மம்முட்டி!

தெலுங்கில் அதிகப் பரிச்சயமில்லாத மம்முட்டியை இசைக் கலைஞன் பாத்திரத்தில் துணிந்து நடிக்க வைத்திருக்கிறார் விஸ்வநாத். வெள்ளமாய் ஓடும் சங்கீதம், படம் முழுக்க.

அனந்தராம சர்மா பெரிய இசை மேதை. சிறு டீக்கடை நடத்தும் தம்பதியின் மகன் கங்காதர் இளம் வயதிலேயே சங்கீத ஈடுபாட்டால் சர்மாவைக் கவர்கிறான். ஆனால், நாளடைவில் கங்காதர் தம்மை மிஞ்சுவதைச் சகித்துக் கொள்ள முடியாமல் சர்மா புழுங்குகிறார்.

சர்மாவாக மம்முட்டி, அவர் மனைவியாக ராதிகா, கங்காதராக ''மால்குடி டேஸ்'' மஞ்சுநாத். மூன்று முழுமை பெற்ற சித்திரங்கள். எஸ்.பி.பி.யும், வாணியும் வீணையாய் இழைகிறார்கள்; உருக்குகிறார்கள். கர்வமும் பொறாமையும் கொண்ட



ஒரு கலைஞனின் வீழ்ச்சியைச் சித்திரிக்கும் படத்தில்'தங்கள் பூரணத்துவத்தைக் காட்டியிருக்கிறார்கள் விஸ்வநாத்தும், கே. வி. மகாதேவனும்.

படத்தில் அனந்தராம சர்மாவிற்குப் பத்மஸ்ரீ விருது கிடைக்கிறது. அதை ஏற்க மறுக்கிறார் அவர். ''இந்த விருதை எதிர்பார்த்து நான் சங்கீதக்காரனாகவில்லை'' என்கிறார். ''சர்மாவின் கர்வத்தைக் காட்ட இக் காட்சி'' என்று கூறும் கே. விஸ்வநாத், இவ்வாண்டின் பத்மஸ்ரீ விருது பெற்றவர்களில் ஒருவர்.

●● கிருஷ்ணாராவ் கமிஷன் சிபாரிசின் படி விநாயகர் சதுர்த்தி தின பெரும் ஊர்வலங்களை அரசு தடை செய்தது. மதக் கலவரங்களைத் தவிர்க்க விதித்த தடையை எதிர்த்து பி. ஜே. பி., ஆர். எஸ். எஸ்ஸின் பெரும் கிளர்ச்சி நடந்தது. தடையை வாபஸ் பெற்று விட்டார்கள். சிறு சிறு ஊர்வலங்களை அனுமதிக்கலாம், விநாயகர் சிலை மூன்று அடி உயரத்திற்கு மேல் இருக்கக் கூடாது என்கிறது அரசு. அத்துடன் வகை வகையாய் விநாயகரை உருவகப்படுத்துவதைத் தடை செய்தால் நன்றாக இருக்கும். உதாரணமாய்ச் சென்ற ஆண்டில் காணப் பட்டவை : நேரு, காந்தி, கைகளில் விநாயகர்கள்; அயோத்தி கோவில் அருகில் வில், அ ம் பு ட ன் விநாயகர்; ஆடை உடலமைப்பில் ராஜீவ் காந்தி போல் விநாயகர்; இவரை மாலையிட்ட பின் குனிந்து பட்டனை அமுக்கும் தனு உருவம்... இப்படி...!

●● கரையோர ஆந்திரப் பகுதியில் இருக்கும் நெசவாளர்கள் நிலை பரிதாபகரமானது. இதுவரை 93 பேர் பட்டினியால் செத்து விட்டனர். பல லட்சம் நெசவாளர்களின் தினசரி ஒரு வேளைச் சாப்பாட்டு வ ா ழ் க் ை க, தொடர்ந்து கொண்டிருக்கிறது.

●● ஆ தி வ ா சி க ளு டன் நக்சலைட்டுகளின் ஈடுபாடு நெருக்கமானது. பல கிராமங்களில் ஆதிவாசிகள் அடைக்கலம் தருகிறார்கள். சில சமயம் சச்சரவாகிறது. நக்சலைட் தரும் சிரமத்தால் எரிச்சலடைந்த ஆதிவாசி ஒருவர், ஏ.கே. 47க்கு எதிராக வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டார். அம்பு பட்டு நக்சலைட் அவுட்!

●● நான்கு அடி உயரம், 6 வயது ருத்விக். ஹைதராபாத்திலிருந்து திருப்பதி வரைக்கும் 1128 கி.மீ. காரில் பயணம். டிரைவர் அவன்தான். நிறுத்தாமல் தொடர்ந்து பெரிய சாதனை படைத்திருக்கிறான். வக்கீல் அப்பா அவன் ஓட்ட சௌகரியமாய்க் காரைத் திருத்தி அமைத்திருக்கிறார். சரி, ஆனால் சட்டம் எப்படி அனுமதிக்கிறது?

- அப்பன்

# எல்லாவற்றையும் விட மேலான பலம் ஆன்ம பலம்











- அறிவுக்கு தெய்வம் விநாயகர்
- ஆற்றலுக்குத் தெய்வம் சுப்ரமணியர்
- வித்தைக்குத் தெய்வம் வாணி
- செல்வத்துக்கு தெய்வம் லக்ஷ்மி.

இவர்களுக்கு எல்லாம் தெய்வமாக இருப்பவர் பரம்பொருள் அல்லது மஹாவிஷ்ணு.

செல்வமும் அறிவும், ஆற்றலும் நமக்குப் பலத்தைத் தருகின்றன. இவற்றிற்கு எல்லாம் மேலான பலம் ஆன்ம பலம் ஆகும். எனவே ஆன்ம பலத்தைத்தரும் மஹாவிஷ்ணு ஈஸ்வரருக்கும் ஈஸ்வரராக இருக்கின்றார்.

தர்மச்சக்கரம்

ஆன்ம பலம் பெற்ற நல்லோருக்கு கிராண்ட் ஸ்வீட் வாங்கி விநியோகியுங்கள்.

---

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை-600 020. போன்: 412557

# காதலெனும் வானவில்

ஆனந்தி

## 23

அப்பா பேசிக் கொண்டு போகப் போக அவளுள் வியப்பும் பரிதாபமும் ஏற்பட்டன. 'காட், எப்படிப்பட்ட மனச் சிக்கல்களில் இவர் தன்னை வருத்திக் கொண்டிருக்கிறார்' என்று தோன்றிற்று. இப்படிப்பட்ட பாவனைகள் இவருள் இருப்பதைத் தன்னால் எப்படி இத்தனை நாட்கள் தெரிந்து கொள்ள முடியவில்லை என்று ஆச்சரியமாக இருந்தது. ஆனால் இவருடைய உணர்வு நிலை வேறு. பிணைப்புகளும் சார்புகளும் வேறு. அவளும் மஹேஷ்ூம் அதில் சம்பந்தப் பட்டுப் போனதுதான் சோகம் என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

நல்ல வேளையாக டாக்டர் உள்ளே வந்து பேசக் கூடாது என்று கண்டித்தார். ''ப்ளீஸ் பேச விடுங்கள், பிறகு எனக்குப் பேச முடியாமல் போகலாம்'' என்று அப்பா சொன்னது அவளை உலுக்கிற்று.

''வீணாக உணர்ச்சிவசப்படாதீர்கள். சரியாக ஆகக்கூடிய உடம்பை நீங்களாகக் கெடுத்துக் கொள்வீர்கள்'' என்று டாக்டர் சொன்ன பிறகே அப்பா அடங்கினார். இயலாமையுடன் கண்களை மூடிக் கொண்டார். அவரை அந்த நிலையில் பார்க்க அவளுக்கு ரொம்பவும் துக்கமாக இருந்தது. அவரை மெல்லத் தொட்டு மிருதுவாகச் சொன்னாள். ''யூ வில் பி ஆல் ரைட் டாட். நம்பிக்கை வையுங்கள்.'' திரும்பத் திரும்ப அதை ஒரு மந்திரம் போல் தான் சொல்லிக் கொண்டிருப்பதைக் கண்டு அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. மூளை ஸ்தம்பித்துப் போனது போல் இருந்தது. மரண பயத்தை வெல்வது அசாத்தியமான காரியம் என்று தோன்றிற்று. 'ஒரு இருட்டிலிருந்து இன்னொரு இருட்டு' என்று ஹரியைப் போல் லேசாக என்னால் நினைக்க முடியாது. பிரத்தியட்ச உலகத்தை அறிந்தவள் நான். நகமும் சதையும், அழுகையும் சிரிப்பும் எப்படியிருக்கிறது என்று அறிந்தவள். இதில் ஏற்படும் நெருக்கம் வேறு. அதனாலேயே மரணம் என்பது சூன்யத்தை ஏற்படுத்துகிறது - காலுக்கடியில் இருந்த ஆதாரம் நழுவுவது போல. பிரத்தியட்ச உலகம் ஏற்படுத்தும் தாக்கங்கள் ஆழமானவை. அனுபவங்கள் துல்லியமானவை.

அதனால்தான் அப்பா அதிகமாகத் துன்பப்பட்டிருக்கிறார். ''நா திடீர்னு செத்துப் போனா உங்கம்மா எப்படி சமாளிக்கப் போறான்னு பயந்து போனேன்'' என்றார் பழைய பயத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு. ''இரண்டு அறிவுத்திசாலியான குழந்தைகளை அமெரிக்காவிலே ஓர் இந்திய விதவை எப்படி வளர்க்கப் போறான்னு கவலைப்பட்டேன். அந்த கலா சாரத்திலே வளர்ற குழந்தைகள் அப்பா வுடைய கவனிப்பு இல்லாம, நாள் முழுவதும் வெளியிலே வேலை செஞ்சு வீட்டுக்குச் சோர்ந்து வர்ற அம்மா கிட்ட எந்த அளவுக்குக் கட்டுப் பட்டு இருப்பாங்கன்னு கவலைப் பட்டேன். உனக்கு அப்ப பதினைஞ்சு வயசு. பதினாறு பதினேழு வயசிலே உன் அமெரிக்க சினேகிதர்கள் வீட்டை விட்டுப் போகிற மாதிரி நீயும் கிளம்பிப் போயிட்டா சுஜாதா என்ன செய்வான்னு பயந்தேன். உன்னுடைய ஆதரவு அவளுக்கு என்னிக்கும் இருக்கணும்னு ஆசைப்பட்டேன் மீரா. இல்லேன்னா சுஜாதா நொறுங்கிப் போயிடுவா. உனக்கு அமெரிக்க சினேகிதர்கள்தான் அதிகம். உனக்கு இந்தியச் சூழல் தெரியணும், பாரம்பர்யம் தெரியணும், இல்லேன்னா நீ எங்ககிட்டேர்ந்து விலகிப் போயிடுவேன்னு எண்ணம் பதிஞ்சு போச்சு. நானும் இல்லேன்னா சுஜாதாவி னாலே அதை நிச்சயம் தாங்க முடியாது. அதனாலேதான் ரொம்பத் தீவிரமா யோசிச்சு இந்தியாவுக்கு வந்துடணும்னு முடிவு பண்ணினேன். இங்கேயும் கொஞ்ச நாளா...''

அதற்குள் டாக்டர் வந்து தடுத்ததில் அப்பா வாயை மூடிக் கொண்டார். மேற்கொண்டு என்ன சொல்ல வந்தார் என்று அவளுக்கு விளங்கவில்லை. மனத்திலிருந்ததைச் சொல்லி விட வேண்டும் என்று அவர் ஆத்திரப்பட்டது புதிராக இருந்தது. அவருடைய பயம் எதுவாக இருந்தாலும் அமெரிக்காவில் தோன்றிய பயம் போல் இதுவும் அர்த்தமற்றதாக இருக்கும் என்று

சோர்வு ஏற்பட்டது. அவரது இத்தனை பயங்களுக்கும் பின்னால் இருப்பது அம்மாவின் மேல் இருக்கும் அவரது அசைக்க முடியாத பிரியம் என்பது நெகிழ்ச்சியை ஏற்படுத்திற்று.

அம்மாவுக்காக என்னவெல்லாம் செய்யச் சித்தமாக இருந்திருக்கிறார் இவர்! இவர் செய்ததெல்லாம் சரியா தப்பா என்று விவாதிக்கத் தனக்கு உரிமை கிடையாது என்று தோன்றிற்று. ஆனால் அம்மாவைப் பற்றிக் கவலைப்பட்ட அளவு தன்னைப் பற்றியும் மஹேஷைப் பற்றியும் கவலைப்படவில்லை என்று வருத்தம் ஏற்பட்டது. அமெரிக்காவில் குடும்பம் நடத்தத் தீர்மானித்த போதே உங்கள் குழந்தைகள் வித்தியாசமான சூழலில் வளருவார்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்! நான் பிறந்தது அமெரிக்காவில். இப்பவும் அமெரிக்க பிரஜை. இந்தியாவில் இன்னும் எனக்குப் பொருந்தவில்லை. என் எண்ணங்கள் ஒரு அமெரிக்க டீன் ஏஜரைப் போல் இருந்தால் அது என் குற்றமில்லை...'

டிருக்கிறார்' என்ற பிரக்ஞை, சில மணி நேரப் போதில் சிந்தனைக் கோணத்தை வித்தியாசப்படுத்திற்று. நான் பொறுப்பில்லாமல் இருப்பேன் என்று எப்படி இவருக்குச் சந்தேகம் தோன்றிற்று என்று விசனம் ஏற்பட்டது. எனக்கு உங்களிருவரிடம் இருக்கும் நெருக்கம் இங்கு என் தோழிகளுக்குத் தங்கள் பெற்றோர்களிடம்



அப்பா இன்னும் தூங்கிக் கொண்டிருந்தார். ஆனால் அவருடன் இத்தனை நேரம் பேசியது போல அவளுள் பிரமை யேற்பட்டது. அப்பா இப்படிப்படுத்ததில் திடீரென்று அவளுக்குப் பத்து வயது கூடி விட்டது போல் தோன்றிற்று. 'என்னைத் தான் இவர் மலை போல் நம்பிக் கொண்

இல்லை...

யாரோ மெலிதாக அழும் குரல் கேட்டது. அவள் திடுக்கிட்டு எழுந்து தடுப்பு ஸ்க்ரீனுக்கு அப்பால் பார்த்தாள். ஒரு படுக்கையைச் சுற்றி டாக்டர்களும் நர்சுகளும் நின்றிருந்தார்கள். கட்டிலின் விளிம்பைப் பிடித்தபடி ஒரு பெண், அம்மாவின்



❑ சென்னை அண்ணாநகரில், தள்ளுவண்டியில் தர்பூசணிப் பழங்களை விற்கும் ஒரு பெண், தர்பூசணித் துண்டங்களை குடைக் கொசுவலைக்குள் வைத்துச் சுகாதாரமாக வியாபாரம் செய்து வருகிறார். மற்ற தள்ளுவண்டி வியாபாரிகளும் இதே முறையைக் கையாளலாமே!

- கே. என். பாலகிருஷ்ணன்

வயசிருக்கும். நின்று தனக்குள் அழுது கொண்டிருந்தாள்.

மீரா கலவரத்துடன் தன் இடத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டாள். அந்தப் பேஷண்ட் இறந்து விட்டார் என்று தோன்றிற்று. அப்பா இன்னும் கண் மூடிய நிலையில் படுத்திருந்தார். மானிட்டர் துள்ளிக் கொண்டிருந்ததில் மூச்சு இருக்கிறது என்று நிம்மதியேற்பட்டது. அழுகை மெல்ல மெல்ல தேய்ந்து ஒய்ந்தது. மீராவுக்கு எழுந்து பார்ப்பதற்குப் பயமாக இருந்தது. உட்கார்ந்த நிலையிலேயே கால்களைக் குத்திட்டு அமர்ந்து கொண்டு முகத்தை முழங்கால்களுக்குள் புதைத்துக் கொண்டாள். திடீரென்று மிக மிக ஆயாசமாக இருந்தது.

அப்பாவின் குரல் கேட்டது போல் அவள் திடுக்கிட்டு நிமிர்ந்தாள். அப்பா விழித்திருந்தார். அவள் அவசரமாக அவரருகில் சென்றாள். ''கூப்பிட்டீங்களாப்பா?'' என்றாள்.

''பரீட்சை எப்படிப் பண்ணே?'' என்றார் அவர் மிக மெதுவாக.

''ரொம்ப நன்றாய்ப் பண்ணினேன்'' என்றாள் அவள்.

அவர் அதரங்களில் மெல்லிய புன்னகை அரும்பிற்று.

''நன்றாய்ப் படி. நிறையப் படி.''

அவர் மீண்டும் கண்ணை மூடிக் கொண்டார் தனக்குள் ஆழ்ந்து போனவர் போல்.

''மெடிகல்லுக்காக அமெரிக்கன் யூனிவர்ஸிடிக்கு அப்ளிகேஷன் போட்டிருக்கியே, இடம் கிடைச்சா சேர்ந்துடு. பணம் இருக்கு. முயற்சி பண்ணா ஸ்காலர்ஷிப்பும் கிடைக்கும்'' என்றார் கண்ணைத் திறக்காமலே. அவளுக்குக் கலவரமாக இருந்தது. தனக்குத்தானே சமாதி கட்டிக் கொண்டு அதிலிருந்து இவர் பேசுவது போல் தோன்றிற்று.

''டாட். நீங்க எதுக்கு இதையெல்லாம் இப்பச் சொல்லணும்?'' என்றாள் பரிதவிப்புடன். ''வீட்டுக்கு வந்தப்புறம் சொல்லுங்களேன். யூ ஜஸ்ட் ரிலாக்ஸ் நௌ.''

''வீட்டுக்குப் போனேன்னா சரி. போகல்லேன்னா...?''

அவளுக்கு அழுகை வந்தது. இவர் நம்மைப் பயமுறுத்துகிறாரோ என்று கூடத் தோன்றிற்று.

''டாட் ப்ளீஸ். இப்படியெல்லாம் பேசாதீங்க.''

''ஸாரி கண்ணம்மா'' என்றார் அவர் கண்களைத் திறந்து. ''நான் தயாராயிருக்கேன் அவ்வளவுதான். உங்கிட்ட நான் இதைச் சொல்ல வேண்டியது அவசியம். படிப்பு முக்கியம் போல அம்மாவும் மஹேஷும் முக்கியம். மூத்த குழந்தையானதாலே உனக்குப் பொறுப்பு அதிகம். அதை நீ புரிஞ்சுக்கணும்.''

''இதையெல்லாம் எதுக்கு நீங்க சொல்றீங்க?'' என்றாள் அவள் அழுகை வெடிக்க.

''ஸாரி'' என்றார் அவர் மறுபடி கண்களை மூடிக் கொண்டு. ''நா சொல்றதைத் தப்பா நினைக்காதே. நீ உன் வாழ்க்கையைத் தியாகம் பண்ணணும்னு சொல்லலே. இந்திய குடும்பங்கள்லே ஒரு பிள்ளைக்கு எப்படி பொறுப்பு உண்டோ அதே போல உனக்கும் பொறுப்பு இருக்குங்கறதுக்காகச் சொன்னேன்.''

''நானும் அதை உணர்ந்திருக்கேன்...'' என்றாள் அவள் ரோசத்துடன். ''நான் ஒரு அசட்டு மீனாட்சியோ நந்தினியோ இல்லே, இப்பவே கல்யாணம் பண்ணிண்டு கிளம்பிப் போறேன்னு சொல்ல...''

அவர் அதரங்களில் புன்னகை மலர்ந்தது. 'என்னைப் பற்றி உங்களுக்கு ஏன் சந்தேகம்?' என்று கேட்க நினைத்தாள். ஆனால் அவர் மறுபடி தூங்கிப் போனார். இவர் ஏன் இப்படியெல்லாம் பேசினார் என்று அவளுக்கு வேதனையாக இருந்தது.

அம்மா குளித்து, குங்குமமும் விபூதியுமாகத் தாய்மை துலங்க வந்தாள். ஏற்கெனவே அவளில் ஏதோ கழண்டு போன மாதிரி மீராவுக்குத் தோன்றிற்று. கனிவு சுரந்தது.

''நீ வீட்டுக்குப் போயிடு. மஹேஷ் தனியா இருக்கான். பாட்டி தாத்தா வேற வருவா'' என்றாள் அம்மா அப்பாவைப் பற்றி விசாரித்து விட்டு. ஆஸ்பத்திரியை விட்டுக் கிளம்பும் போது மீராவுக்கு அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. ''அழாதே மீரா அழாதே. பகவான் இருக்கார்'' என்று அவள் முதுகைத் தட்டிய

அம்மாவுக்கும் கண்ணில் நீர் நிறைந்தது.

சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவர்கள் போல் பாட்டியும் தாத்தாவும் மாலையி லேயே வந்து விட்டார்கள். அவர்களைப் பார்த்ததுமே அவளுக்குத் தெம்பு பிறந்தது. அவர்களது பேச்சின் கலகலப்பில் மரணத் தின் பயம் பதுங்கிக் கொண்டது - அரவம் கேட்டதும் பறந்து செல்லும் பட்சி போல. பாட்டி உடனடியாகக் குளித்து விளக்கேற்றி னாள். கண்ணை மூடிப் பிரார்த்திக்கும் போது அண்டசராசரத்துக்கும் பிரார்த்திப் பவள் போலிருந்தது. மஞ்சள் துணியில் முடிந்து வைத்தாள். ''பகவானே, சோதிக் காதே அப்பனே! எங்களுக்குத் தாங்க சக்தி இல்லே'' என்றாள் யாரோ நெருங்கிய பந்துவிடம் பேசுவது போல். அடுத்து நகர்ந்த நான்கு நாட்களும் பாட்டியும் தாத் தாவும் இருந்ததால்தான் சமாளிக்க முடிந் தது என்று மீராவுக்குத் தோன்றிற்று. நிஜமா கவே அந்தப் பகவான் இவர்களது சொல் லுக்குக் கட்டுப்பட்டு வந்து விடுவார் என்று நம்பிக்கை வந்தது. ஆனால் ஆண்டவன் எங்கோ தொலைவுக்குச் சென்றிருக்க வேண்டும். அப்பாவின் ஜீவன் எதிர்பாராத சிக்கலில் மாட்டிக் கொண்டு கோமாவில் சரிந்து ஐந்தாம் நாள் பிரிந்து போயிற்று...

காலடியில் நிலம் பிளந்து போனது போல் தடுமாற்றம் ஏற்பட்டது. தனது அறை யின் தனிமையில் அவள் தலையணையைக் குத்தி ''இட் இஸ் நாட் ஃபேர்!'' என்று அமா னுஷ்யமாய் நின்ற எதையோ மிகக் க்ரோ தத்துடன் திட்டினாள். மஹேஷ் அவ ளுடைய இடையைப் பிடித்துக் கொண்டு அழும் போது தன்னை நிலைப்படுத்திக் கொண்டு அவனைச் சமாதானப்படுத்தி னாள். 'அம்மாவும் மஹேஷும் உன் பொறுப்பு' என்று அப்பா எங்கிருந்தோ நினைவூட்டுவது போல் இருந்தது. மனசைக் கனமாக அழுத்திற்று.

அம்மாவிடம் ஆச்சரியகரமான ஒரு நிதானம் தென்பட்டது. அப்பா ஆஸ்பத்திரி யில் இருந்தபோதே எல்லாக் கண்ணீரை யும் சிந்தி விட்டாள் என்று தோன்றிற்று.

''இரண்டு வருஷமா என்னை இதுக்குத் தயார் பண்ணின்டு வந்திருக்கார் அத்தே!'' என்று பாட்டியிடம் அவள் சொல்வதைக் கேட்கும் போது, தான் இதுநாள் வரை எதையும் கவனிக்காத ஜடமாய் இருந்திருப் பது மீராவுக்குக் கூச்சத்தை ஏற்படுத்திற்று.

பாட்டியும் தாத்தாவும்தான் இடிந்து போனார்கள். சில சமயம் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல் தேம்பி அழுதார்கள்.

டெலிபோனில் யார் யாருக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும் என்று அம்மா அவ ளிடம் சில பெயர்களைச் சொன்னாள்.

அவளுக்குச் சட்டென்று ஹரியின் ஞாப கம் வந்தது. தன்னுடைய துக்கத்தை அவ னுடன் தான் பகிர்ந்து கொள்ள முடியும் என்று தோன்றிற்று. அவனுக்கு போன் செய்து செய்தியைச் சொன்ன போது அழுகை குமுறிக் கொண்டு வந்தது.

''அழாதே மீரா. ப்ளீஸ், அழாதே'' என்றான் அவன் கெஞ்சுபவன் போல். ''உன்னைச் சமாதானப்படுத்த எங்கிட்ட வார்த்தைகள் இல்லே.''

மேற்கொண்டு பேச முடியாமல் அவன் டெலிபோனைக் கீழே வைத்தான்.

மறுநாள் காலையில் துக்கம் விசாரிக்க வந்த கூட்டத்தில் ஹரியும் மைதிலியும் வந்து நின்றதைப் பார்த்து மனசு நெகிழ்ந் தது. இருவரையும் அணைத்துக் கொண்டு மனசு விண்டு விட்டதைப் போல அழுத போது துக்கத்தின் எடை குறைந்தது போல் இருந்தது.

பம்பாயிலிருந்து யசோதாவும் வெங்க டேஷும் வந்தார்கள். பத்தாம் நாள் காரியம் முடிந்ததும் யசோதா அவளிடம் ஒரு கேள்வி கேட்டாள்.

''அந்தக் குருட்டுப் பையன் இருக் கானே, ஸாரி அவன் பெயர் தெரியாது எனக்கு. அவனோடு உனக்குச் சாதாரண சினேகிதம்தானே?''

இந்தக் கேள்விக்கு என்ன அர்த்தம் என்று மீரா திகைப்புடன் அவளைப் பார்த் தாள்.

(தொடரும்)

---

''இதென்ன புது மாதிரி இருக்கு? அந்தக் கேடி ''போலீஸைப் பிடிக்க... பிடிக்க''ன்னு கத்துறானே...?''

''மாமூல் கம்மியா இருக்குன்னு அவர் வாங்காமல் ஓடறார்; இவன், ''பிடிக்க பிடிக்க''ன்னு பணத்தை எடுத்துக்கிட்டு அவர் பின்னால ஓடறான்!''

- சீர்காழி வி. ரேவதி



தமயந்தி இவனைப் பார்த்து மெலிதாகச் சிரித்தாள்.

விஸ்வநாதனுக்கு அந்தச் சிரிப்பு சற்று தைர்யத்தை அளித்தது.

டிராயரை இழுத்து, புத்தகத்தின் நடுவிலிருந்து கடிதத்தை உருவினான். விரல்கள் மெலிதாக நடுங்கின. சற்று நேரம் உள்ளுக்குள் விவாதித்தான்.

'விஸ்வநாதா... இது வேண்டாம்'

'இல்லை. வேண்டும்.'

'இது தவறு.'

'காதலை வெளிப்படுத்துவது தவறில்லை.'

'சரி தவறை நிர்ணயிப்பது நீயல்ல; தமயந்தி.'

'அதனால்தான் இக் கடிதம்.'

மீண்டுமொருமுறை தமயந்தி இவனைப் பார்த்துச் சிரித்தாள்.

தடக்கென எழுந்தான். தமயந்தியின் அருகில் போனான்.

''என்ன விஸ்வநாதன்?''

கடிதத்தை அவளிடம் நீட்டினான். அவள் சற்றுத் தயக்கத்துக்குப் பின் வாங்கினாள்.

''என்ன இது?''

''படிங்க... நிதானமா யோசிச்சுப் பதில் சொல்லுங்க...!''

வேகமாய் நடந்து ஸீட்டில் உட்கார்ந்தான்.

நிமிர்ந்து அவளைப் பார்த்தான். அவள் கடிதத்தைப் பிரித்துக் கொண்டிருந்தாள். அவள் முகம் வியர்க்க ஆரம்பித்திருந்தது.



# யோசித்துச் சொன்னால்

மதுமிதா

கர்சிப் எடுத்து முகம் துடைத்தான்.

தமயந்தி தடக்கென எழுந்தாள். இவனைத் தாண்டி நடந்து போய் டாய்லெட்டுக்குள் நுழைந்தாள்.

இவனுக்குள் சிலீரிட்டது.

ஐந்து நிமிடம் கழித்துத் திரும்பியவள் இவன் பக்கம் பார்க்காமலேயே தன் ஸீட்டில் போய் அமர்ந்தாள்.




லஞ்ச் டைம். அலுவலகம் நிசப்தமாயிருந்தது. விஸ்வநாதன் தனியனாய் அமர்ந்திருந்தான். சாப்பிடப் பிடிக்கவில்லை. 'இது பெரிய ஹிம்ஸை. முடிவு தெரியாமல் இதுவா, அதுவாவென அல்லாடுவது பெரிய வேதனைதான்.

மென்மையாய்க் காலடிச் சப்தம் கேட்டது. திரும்பாமலேயே இவனுக்குத் தெரிந்தது. தமயந்தி அவன் அருகில் வந்தாள். மடக்கு சேரை அவன் எதிரில் போட்டு அமர்ந்தாள். ஒற்றை நிமிடம் இவனை உற்றுப் பார்த்தாள். பின் தயக்கமாய் இவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஏன் விஸ்வநாதன் இப்படி செஞ்சீங்க?''

கேள்வி கஷ்டப்படுத்தியது.

''எனக்குப் பிடிச்சிருந்தது தமயந்தி. நேர்ல சொல்லத் தயக்கம். அதான் எழுதிட்டேன்...!''

''பேசத் தயங்குற விஷயத்தை எழுதாமலும் இருந்திருக்கலாமே...!''

விஸ்வநாதன் தலைகுனிந்தான்.

''தப்புன்னா விட்ருங்க தமயந்தி...!''

''தப்பில்லே...!''

''அப்ப சரியா?''

''அவசரப்படாதீங்க... நான் ஒன்னு சொன்னா கேப்பீங்களா?''

''நிச்சயமா... தமு...!''

'தமயந்தி' குறுகி 'தமு'வாகியதை அவள் கவனித்தாள்.

''சாயங்காலம் எங்க வீட்டுக்கு வர்றீங்க என்னுடன்...!''

''ஏன்?''

''அங்கே சொல்றேன். வாங்க...!''

தயங்கினான்.

''பயப்படாதீங்க. வந்து என்னோட பேமிலியப் பாருங்க.''

''சரி.''

தமயந்தி வீடு ஒன்றும் அவ்வளவு பெரிதில்லை. அடக்கமாய் இருந்தாலும் அழகாய் இருந்தது. தமயந்தியின் அம்மா மிக அழகாயிருந்தார். தமயந்தியின் மூன்று சகோதரிகளும் இவனிடம் சகஜமாய்ப் பேசினார்கள்.

பேச்சினிடையே தடக்கென தமயந்தி சொன்னாள்.

''அம்மா... விஸ்வநாதன் என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்றாரு...!''

அம்மா இவனை உற்றுப் பார்த்தாள். தமயந்தியின் சகோதரிகள் மெல்ல எழுந்து நகர்ந்தார்கள். தமயந்தி அவசரமாய்த் தடுத்து நிறுத்தினாள்.

''தமயந்தி, இவருக்கு எல்லாத்தையும் சொல்லிடு!'' என்றாள் அம்மா.

தமயந்தியின் வீட்டிற்கு மிகப் பெரிய துக்கமிருந்தது. தந்தை மூர்க்கன். தாயின் அழகே அவளுக்கு எதிரி. ரசிக்க வேண்டிய கணவன் ஹிம்சைப்படுத்தினான்.

அவன் நல்ல கணவனுமில்லை. நல்ல தகப்பனுமில்லை. நாலும் பெண் குழந்

# அருள்வாக்கு



சௌக்கிய அனுபோகம் அதிகமாக ஆக, ஞானம் வேண்டும் என்ற எண்ணம் குறைந்து கொண்டே போகிறது. இதனால்தான் லக்ஷ்மி இருக்கிற இடத்தில் சரஸ்வதி இருப்பதில்லை என்று பொதுவில் வசனம் வந்து விட்டது. இதற்கு வேடிக்கையாக ஒரு காரணம் தோன்றுகிறது. சாதாரணமாக மாமி யாரும் மாட்டுப் பெண்ணும் ஒரே இடத்தில் ஒத்து இருக்க மாட்டார்கள். மகாவிஷ்ணுவும் பிரம்மாவும் தகப்பனாரும் பிள்ளையும் ஆகி றார்கள் என்றால், அப்போது மஹாலக்ஷ்மியும் சரஸ்வதியும் மாமியார் - மாட்டுப் பெண் ஆகிறார்கள். இவர்கள் சேர்ந்து சௌ ஜன்யமாக இருக்க மாட்டார்களே! அத னால்தான் பொதுவில் லக்ஷ்மி கடாக்ஷம் இருக்கிற இடத்தில் சரஸ்வதி கடாக்ஷம் இருப்பதில்லை. அல்லது இதையே நல்லபடியாகவும் சொல்லலாம். மாமியாரிடம் உள்ள மகா மரியாதை காரணமாகவே அவள் இருக்கிற இடத்தில் தான் முந்திரிக் கொட்டை மாதிரி தெரியக் கூடாது என்று சரஸ்வதி ஒதுங்கிப் போவதாகவும் சொல்லலாம்.

இதெல்லாம் வேடிக்கையாகச் சொல்கிற பேச்சு. வாஸ்தவத்தில் இருக்கிறது ஒரு பராசக்திதான். அவள்தான் எந்தெந்த சமயத்தில் எந்தெந்த விதமாக அநுக்கிரகம் செய்து பக்குவத்தைத் தர வேண்டுமோ அப்படிச் செய்வதற்காக மகாலக்ஷ்மியாக, சரஸ்வதி யாக, ஞானாம்பிகையாக வருகிறாள். ஏதோ ஒரு ரூபத்தில் பக்தி என்று வைத்து விட்டால் போதும். அப்புறம் நடக்க வேண்டியதை அவளே பார்த்துக் கொள்வாள். இந்த பக்திதான் நமக்குப் பெரிய செல்வம். அதுவே பெரிய லக்ஷ்மி.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

தைகள். தமயந்திக்கு மூன்று வயதிருக்கும் போது அவள் தகப்பன் ஓடிப் போனான். மீண்டும் திரும்பவேயில்லை.

அவன் பார்த்த வேலையே அவன் அம்மாவுக்குக் கிடைத்தது.

ஒரு முப்பது வயதுப் பெண் நாலு பெண் குழந்தைகளுடன் யுத்தத்தில் குதித்தாள். எத்தனையோ ரணங்கள். குழந்தைகள் வளர்ந்தன.

பெரிய பெண் டீச்சர் உத்யோகத்திற்குப் போனாள். இரண்டாவது பெண் தமயந்தி. மூன்றாமவள் கல்லூரிக்கும், நான்காமவள் பள்ளிக்கும் போன போதுதான் டீச்சர் காதல் திருமணம் செய்து கொண்டாள்.

அம்மா முதலில் மறுத்தாலும் பின் சம்மதித்தாள். அம்மா மறுத்தது நியாயம் தான் என ஒரே வருடத்தில் தெரிந்து கொண்டார்கள்.

கதையில் வருவது போலவே நம்ப முடியாத நிகழ்ச்சிகள் இவர்கள் வாழ்வில் நடந்தன. ஒரு வருட அலைச்சலுக்குப் பின் அக்கா 'டைவர்ஸி' ஆனாள்.

தமயந்தி முடித்த போது அவள் அம்மா வின் கண்கள் லேசாய்க் கலங்கியிருந்தன. அவள் அக்கா எழுந்து போய் ஜன்னல் கம்பிகளைப் பற்றிக் கொண்டிருந்தாள்.

''ஏன்.. விஸ்வநாதன் எங்களுக்கு மட்டும் இப்படி நடக்கணும்.. நாங்க என்ன தப்பு செய்தோம்...?'' தமயந்தி ஆக்ரோஷமாய்க் கேட்டாள்.

விஸ்வநாதன் மௌனமாயிருந்தான்.

''இப்ப சொல்லுங்க விஸ்வநாதன். நீங்க சொன்னவுடனே உங்களை எப்படி நான் கல்யாணம் பண்ணிக்க முடியும். இந்த ரெண்டு வருஷமாய் உங்களைப் பார்த்துட்டு வர்றேன். யு ஆர் எ ஜென்டில் மேன்.. ஐ லைக் யூ... ஆனால் என் பொறுப்புகளை மனப்பூர்வமாப் பகிர்ந்துக்க நீங்க தயாரா என்கிறது எனக்குத் தெரியாது...''

விஸ்வநாதன் தொடர்ந்து மௌனமாயிருந்தான்.

''உங்க பதிலை என்கிட்டே இப்ப, உடனே சொல்ல வேணாம் விஸ்வநாதன். யோசித்து நாளைக்குச் சொல்லுங்க. சொல்லக் கூட வேண்டாம்... சம்மதம்னா உங்க ஸ்கூட்டர் எடுத்துட்டு நாளை காலை ஆபீசுக்குப் போறப்ப எங்க வீட்டுக்கு வாங்க. சேர்ந்தே போகலாம். விருப்பமில்லையென்றால் நேராப் போய்டுங்க...'' தமயந்தி தீர்க்கமாய்ச் சொன்னாள்.

மறுநாள்.

விஸ்வநாதன் மிகக் கவனமாய், தமயந்தியின் வீட்டைத் தவிர்த்து வெகு சீக்கிரமாகவே ஆபீசுக்குப் போனான்.

**சீதா ராஜன் :**

# இசையின் அழகை உணர்த்தும் இளம் கலைஞர்

செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் கச்சேரிகள் செய்வதை வெகுவாகக் குறைத்துக் கொண்ட கால கட்டம் அது. இசை ரசிகர்களிடையே இதனால் பெருத்த ஏமாற்றமும் ஏக்கமும் நிலவினாலும் அப்பெரியவரின் அக்ஞாத வாசத்தால் அவரது சிஷ்யர்களாகிய இளம் தளிர்கள் பயனடைந்து கொண்டிருந்தார்கள். நாள் முழுவதும் வீட்டில் இருந்தபடி பாடிக்கொண்டும் இசையைப் பற்றிப் பேசிக் கொண்டும் இருப்பார் செம்மங்குடி. எப்பொழுதும் நாலைந்து சிஷ்யர்கள் அவர் அண்மையில் இருப்பார்கள். அவரது இசை மழை



☛ இசைப் பயிற்சியில் புதிய முயற்சிகள் : மீரா, வித்யாவுடன் சீதா.



☛ ''இசையே யோகம்தான்....''

யிலும் அவர் மனைவியின் அன்பு மழையிலும் நனைந்தபடி கீர்த்தனைகளையும் இசை நுணுக்கங்களையும் பயில்வார்கள்.

இந்த வளமான சூழலில் வளர்ந்தவர்களுள் ஒருவர் சீதா ராஜன். பி.ஏ. பொருளாதாரமும் பெங்களூர் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. மியூசிக்கும் பயின்று, இசைக்கான தேசிய ஸ்காலர்ஷிப் பெற்று, செம்மங்குடியின் சிஷ்யரானார்.

''மாமாவிடம் (செம்மங்குடி) பாட்டு கற்றுக் கொண்ட மூன்று வருடங்கள்தான் என் வாழ்க்கையின் மறக்க முடியாத மிகச் சிறந்த காலகட்டம்....'' என்கிறார் சீதா ராஜன். ''பாட்டைத் தவிர வேறு பிரக்ஞையே அப்போது இராது. கவனத்தை ஈர்க்கும் வேறு விஷயங்களோ பொறுப்புகளோ கிடையாது. தினமும் மாமா வீட்டுக்குப் போய்விடுவேன். தமக்குத் தெரிந்ததையெல்லாம் தம் சிஷ்யர்களுக்குச் சொல்லித் தந்துவிட வேண்டும் என்ற உயர்வான எண்ணம் அவருக்கு. ஆசையாகவும் அன்போடும் சொல்லித் தருவார். பாட்டுக் கற்றுத் தருவதோடு, எப்படி டியூன் போடுவது, மற்றவர்களுக்கு எப்படிப் பயிற்றுவிப்பது என்றெல்லாம் சொல்லித் தருவார்... கச்சேரிகளுக்குப் போனால் (கேட்க) எங்களைக் கூட அழைத்தும் போவார்; விமர்சிப்பார், பாராட்டுவார், விவாதிப்பார். பயமின்றி அவரிடம் கேள்விகள் கேட்கலாம், பேசலாம்... இன்றைக்கும் அதே சுவாதீனத்துடன் அவரை அணுக முடிகிறது....''

- இப்படிச் சொல்லும் போதே அந்தப் பொற்கால நினைவுகள் சீதாவின் கண்களுக்குத் தனியான ஒளியூட்டுகின்றன.

செம்மங்குடியடம் பெற்ற பயிற்சி, சீதாவின் இசைக்கு அபூர்வ வளம் சேர்த்திருக்கிறது. இயல்பிலேயே சன்னமான, இனிமையான குரல் அமையப் பெற்ற இவர் பாடும்போது, சிரமமின்றி இழையும் சுருதி சுத்தமும் மனமொன்றிய லயிப்பினால் விளையும் பாவமும் மேம்பட்டுத் தெரிகின்றன. ஏழு வயது முதல் பத்துப் பன்னிரண்டு வருடங்கள் கிட்டாமணி அய்யரிடம் பயின்று (செகந்தராபாத்) பலமான அஸ்திவாரம் போடப் பெற்று, பின்னர் ஹிந்துஸ்தானி இசையிலும் பயிற்சி பெற்றவர் சீதா. இந்த பாதிப்புகளையும் அவர் கார்வை கொடுத்து நின்று நிதானமாகப் பாடும் போது உணர முடிகிறது.

இவ்வளவு திறமைவாய்த்திருந்தாலும் சீதாவுக்குக் கிடைக்கும் மேடை வாய்ப்புக்கள் சராசரிக்கும் குறைவே...

''இதற்குக் காரணம், மேடைப் பாடகராக நன்றாக வேரூன்றியிருக்கக் கூடிய ஒரு கால கட்டத்தில் திருமணமாகி நீங்கள் வடக்கே சென்றுவிட்டதுதானா....?'' என்று சீதாவிடம் கேட்கிறோம்.

''அது ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால் என் சித்தாந்தமே இசையை அதன் ஒசைகளின் அழகைத் தெரிந்து கொண்டு சுவைக்க வேண்டும் என்பதுதான். முழுக்க முழுக்க சங்கீதத்தில் ஈடுபட்டு அதைப்பற்றி மேலும் மேலும் தெரிந்து கொள்ள வேண்டும். அந்த ஆழ்ந்த ஈடுபாடும் அதன் மூலம் கிடைக்கும் இசையறிவும் தான் முதலிடம் பெற வேண்டும். நம் திறமையை வெளிப்படுத்துவது என்பது இரண்டாம் இடமே பெற வேண்டும். அறிவும் ஞானமும் வளர்த்துக் கொண்டால் திறமைக்கு வாய்ப்புக்கள் தாமாகவே வரும்.....''

''காலத்துக்கு ஒவ்வாத சித்தாந்தமாய் இருக்கிறதே.....''

சிரிக்கிறார் சீதா : ''திறமையை வெளிப்படுத்துவது பிரதான நோக்கமாகும் போது ஞானத்தை வளர்த்துக் கொள்வது இரண்டாம் பட்சமாகி விடுகிறது. இதனால் நம் இசை முழுமை பெறாது என்று நான் நினைக்கிறேன்....'' என்கிறார்.

சென்னை, மியூசிக் அகடமியின் இசைக் கல்லூரியில் ஆசிரியையாகவும் அதன் இசை ஆய்வுப் பிரிவில் உதவியாளராகவும் பணியாற்றும் சீதாவுக்குச் சுயமாக ஒரு சிறு இசைப் பள்ளி ஆரம்பிக்கும் ஆர்வமும் இருக்கிறது. இசை பயிலும் இளைஞர்களுடன் அதிகம் பழகும் வாய்ப்பு உடையவர் என்பதால் அவரிடம் கேட்கிறோம்.

''இசைக்கும் ஆன்மிகத்துக்கும் தொடர்பு இருக்கிறது என்பதை இன்றைய இளைஞர்கள் உணர்ந்து ஒப்புக் கொள்கிறார்களா....?''

''அவர்கள் தாமாக உணராவிட்டாலும் அதை உணர்த்துவதில் நான் மிகவும்

சிரத்தை எடுத்துக் கொள்கிறேன். இசை என்பது ஒரு யோகப் பயிற்சி மாதிரிதான். புலன்களையும் மனத்தையும் பேரானந்தத்தில் ஆழ்த்தி உயர்த்தவல்லது என்று எடுத்துச் சொல்கிறேன். ஆனால், வரையறுக்கப்பட்ட சூழலில், இத்தனை மாதங்களுக்குள் இவ்வளவு சொல்லித் தர வேண்டும் என்ற கட்டுப்பாட்டில் இயங்கும் பொழுது இந்த முயற்சிகள் பலம் இழக்கின்றன. தவிர, பாட்டுக் கற்றுக் கொள்ள வருபவர்கள் என்ன நோக்கத்துடன் வருகிறார்கள் என்பதும் முக்கியம். 'என் குழந்தை பெரிய பாடகியாக வேண்டும், பரிசும் பாராட்டும் பெற வேண்டும்' என்ற தீர்மானித்த நோக்கத்துடன் பல பெற்றோர்கள் குழந்தைகளை இசைப் பயிற்சியில் ஈடுபடுத்துகிறார்கள். குழந்தைகளுக்கும் அதே இலக்குகள் மனத்தில் படிந்து போகின்றன. இத்தகையவர்கள் இசையை ஆனந்த அனுபவமாக உணர்வது சிரமம்.

''ஒரு ஆசிரியர் எந்தச் சூழலில் இசையை, அதன் ஜீவனை, மாணவர்களுக்குப் பயிற்றுவிக்க முடியும்....?''

''இருவருமே திறந்த மனத்துடன் வகுப்புக்கு வர வேண்டும். விவரம் தெரிந்த சிறு பிராயத்திலேயே சுமார் ஏழு, எட்டு வயது - பயிற்சியை ஆரம்பிக்க வேண்டும். ஆசிரியர் எப்போதும் சொல்லிக் கொடுத்துக் கொண்டே இருக்கக் கூடாது. மாணவர்களின் கற்பனையைத் தூண்டி அவர்களைச் சிருஷ்டிக்கச் செய்ய வேண்டும். உதாரணமாக ஒரு ராகத்தின் ஸ்வர ஸ்தானங்களைக் கற்றுக் கொடுத்து, மரபு வழி சரளி, ஜண்டை, தாட்டு வரிசைகளை அந்த ராகத்தில் அமைத்துப் பாடச் சொல்லலாம். பல குழந்தைகள் இருந்தால், ஒவ்வொரு குழந்தையையும் ஒரு ஸ்வரத்தை இப்படி மாற்றிப் பாடச் சொல்லி வரிசைப்படுத்தி, பின்னர் எல்லோரையும் சேர்ந்து பாடச் சொல்லலாம். இவ்வாறு செய்தால் குழந்தைகளின் பயமும் கூச்சமும் விலகும்; சிந்தனை தூண்டப்படும், சிருஷ்டிப்பதில் ஓர் ஆனந்தம், பெருமிதம் பிறக்கும் - இசையில் ஈடுபாடு அதிகரிக்கும்....''

வெகு உற்சாகத்துடன் அடுக்குகிறார் சீதா. இந்த முறையில் பெங்களூரில் சிறிது காலத்துக்கு ஒரு வகுப்பு நடத்தி, ஒரு சிறிய இசை ஆர்வக் குழுவை வெற்றிகரமாக வளர்த்திருப்பதைக் குறிப்பிடுகிறார்.

**வி**த்தியாசமான சிந்தனை, இலட்சிய நோக்கு, வாழ்க்கையின் மீது தத்துவார்த்தமான ஈடுபாடு எனத் தனித்தன்மையுடன் விளங்கும் இந்தப் பாடகியின் குடும்பம் எளிமையானது. கணவர் ராஜன் ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றவர். பிளஸ் டூ முடிக்கும் மகன் சேகர் வயலின் பயில்கிறான்.

''கல்யாணத்துக்கு முன்னரும் சரி, பின்னரும் சரி வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளுக்கு மேலாக அதிகம் ஆசைப்படாத குடும்பத்தினரிடையே இருந்து வருகிறேன். இதனால் இசையில் அழகைத் தேடுவதை மட்டுமே என் இலக்காகக் கொள்ள முடிகிறது.....''

சீதா அடக்கத்துடன் சொல்லும்போது சொற்கள் மனப்பூர்வமாக வெளிப்படுகின்றன.

''இத்தகைய தத்துவார்த்த மனப்பான்மை எப்படி கைகூடியது.....?''

''என் பெற்றோரும் சரி, குருநாதர்களும் சரி, இந்த மனப்பான்மை என்னுள் இயல்பாக வளர வழிகாட்டினார்கள். வாழ்க்கையின் மிகச் சிறந்த விஷயங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட விலை இடையாது என்பதைப் படிப்படியாகப் புரிந்து கொண்டேன்'' என்கிறார் சீதா.

திறமையிருந்தும் மேடை வாய்ப்புக்கள் குறைவாகவே இருப்பதை இவரால் எப்படிச் சுலபமாய் ஏற்க முடிகிறது என்பது இப்போது நமக்கும் புரிகிறது.

சந்திப்பு : **சீதா ரவி**

வண்ணப்படம், படங்கள் : **யோகா**

''நாடு ரொம்பக் கெட்டுப் போச்சுங்க....!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க...?''

''கள்ளச் சாராயத்துக்குக் கூட 'ISI' முத்திரை கேட்டு விண்ணப்பிச்சிருக்காங்க...!''

- ஆர். அரிகோபி





# விழியில்

முயற்சிகளைத்
தொலைத்துவிட்டு -
விரக்தியின் விளிம்பில்
நிற்கும்
இளைஞனே!

தொடரும் தோல்விகளால்
இருதயத்தையா
சூன்யப்படுத்திக் கொள்வது?

இமயத்தையே
அசைத்துப் பார்க்கும்
உன் துணிச்சலின் முன்பு
தோல்விகளெல்லாம்
துரும்புகள் தானே!

உன்
வீரியப் பார்வைகளைக் கண்டு
சூரியக் கதிர்களே
வெட்கப்படுமே....!
பின் எதற்குத்
தற்காலிக இருட்டைக் கண்டு
தற்கொலை முயற்சிகள்!



உன்
மூச்சுக் காற்றைச்
சுவாசிக்கும்
உதிர்ந்த மலர்களெல்லாம்
உயிர் பெறும்போது....
உனக்குள் ஏன்
உற்சாகத்தின் மரணம்!

பூகம்பத்தையே
நிறுத்திவைக்கும்
மந்திர வார்த்தைகளை
வைத்துக் கொண்டு....
மௌனத்துக்குள்
மயங்கிக் கிடப்பதா
ஆண்மையின் மேன்மை!



மலர்மதி

பொன்விழா கவிதைப் போட்டி

# காத்திருக்கும் வசந்தகாலம்

சாதனைகளைச்
சந்திக்க வேண்டிய
சந்தர்ப்பங்கள் இருக்க -
நித்தமும்
அவஸ்தைகளைச் சுமப்பதா
வாழ்வின் தத்துவம்!

உனது
விரலின் நுனிகளால்
நட்சத்திரங்களையே
நகர்த்தி வைக்கும்
திறமை இருக்க -
கைகளுக்கு ஏன்
விலங்கிட்டுக் கொள்கிறாய்?

கவலை என்பது
சிந்தனைகளைச்
சிறைப்படுத்தும்
தொற்றுநோய்!
அந்த முற்றுகைக்குள்
மூழ்கிக் கிடந்து
முதுமையாகிப் போவதேன்?

நீ
நிமிர்ந்து நடக்கும்போது...
உன் வழியினில்
காத்திருக்குமே
வசந்த காலம்!
நீயேன்
கண்கள் இரண்டிலும்
அச்சத்தை
அச்சடித்துக் கொள்கிறாய்?

உன்னைச் சுற்றி
நம்பிக்கை தீபங்களின்
வெளிச்ச வட்டத்தை
ஏற்படுத்திக் கொள்....

வெற்றியும்
முன்னேற்றங்களும்
புறப்பட்டு விடும்....
- உன் முகவரியைச்
சந்திக்க!





# சிவகாமியின் சபதம்

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

## ஜயஸ்தம்பம்

வாதாபி நகருக்கு இரண்டு காத தூரம் கிழக்கே ஒரு குன்று இருந்தது. சுற்றிலும் காடு அடர்ந்த அந்தக் குன்றின் ஒரு பக்கத்துச் சரிவில் அடுத்தடுத்துக் குடைந்த குகைகள் இரண்டு இருந்தன. இரண்டு குகைகளும் குடையும் வேலை பூர்த்தியாகாமல் அரைகுறையாக விடப்பட்டிருந்தன.

பௌத்தர்களோ சமணர்களோ அந்தக் குகைகளைக் குடைய ஆரம்பித்திருக்க வேண்டும். அப்புறம் எந்தக் காரணத்தினாலோ வேலையை நடுவில் நிறுத்தி விட்டுப் போயிருக்க வேண்டும்.

குகைகளில் ஒன்றுக்குள்ளேயிருந்து சலசல வென்ற சப்தத்துடன் ஒரு சிற்றருவி வெளியே வந்து கொண்டிருந்தது. குகையின் வெளியில் அந்த அருவி அங்குமிங்கும் தவழ்ந்து விளையாடி முத்து நீர்த்துளிகளை வாரி இறைத்துவிட்டுக் கீழ்நோக்கிச் சென்று அடர்ந்த விருட்சங்களின் நிழலில் மறைந்தது.

இவ்வளவு அழகான இயற்கைக் காட்சியின் ரம்யத்தைக் கெடுத்து அருவருப்பையுண்டு பண்ணக்கூடிய பொருள்கள் சில அருவியின் இருபுறத்துப் பாறைகளிலும் விருட்சங்களின் அடியிலும் காணப்பட்டன. அவை மனிதர்களின் மண்டை ஓடுகள், மாட்டுக் கொம்புகள் முதலிய காபாலிகர் கூட்டத்தின் சின்னங்களாகும். பாறைகள் சிலவற்றில் இரத்தக்கறை படிந்திருந்ததிலிருந்து, அந்தப் பாறைகள் சமீபத்தில் பலிபீடங்களாக உபயோகப்பட்டிருக்கின்றன என்பது தெரிய வந்தது.

மாலை நேரத்து மஞ்சள் வெயிலினால் பச்சை மரங்களும் பசும்பொன் நிறம் பெற்றுத் திகழ்ந்த நேரத்தில், மேற்கூறிய குகைகளுக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த ஒரு மொட்டைப் பாறையிலே நாலுபேர் உட்கார்ந்திருந்தார்கள். தொலை தூரம் பிரயாணம் செய்திருந்த காரணத்தினால் அவர்கள் பெரிதும் களைப்படைந்திருந்தார்கள். ஆடைகள் அழுக்கடைந்திருந்தன. தலையில் ரோமம் சடை விழுந்திருந்தது. முகவாய்க் கட்டையில் ரோமம் அடர்ந்திருந்தது. அவர்களுடைய இளம்பிராயத்துக்குப் பொருந்தாத சுருக்கங்கள் முகத்தில் காணப்பட்டன. கண்கள் குழி விழுந்து போயிருந்தன. ஆயினும், அந்தக் கண்களிலே ஒரு அசாதாரண ஒளி, இணையில்லா மனோதைரியத்தையும் எடுத்த காரியத்தை நிறைவேற்றும் உறுதியையும் காட்டும் ஜீவசக்தி, - பிரகாசித்தது.

குன்றின் உச்சியில் ஒரு மனிதன் நின்று நாலாபுறமும் உற்று நோக்கிக் கொண்

டிருந்தான். கீழே மொட்டைப் பாறையில் உட்கார்ந்திருந்தவர்கள் அடிக்கடி அவனை அண்ணாந்து நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று மேலே நின்ற மனிதன் குதூகலம் நிறைந்த குரலில், ''அதோ!'' என்றான். அந்தக் குரலிலிருந்தே அவன் நமது பழைய நண்பன் குண்டோதரன் என்பதை அறிந்து கொள்கிறோம்.

''அதோ!'' என்ற சத்தத்தைக் கேட்டதும் மொட்டைப் பாறையில் உட்கார்ந்திருந்த நால்வரின் முகங்களும் மலர்கின்றன. அவன் சுட்டிக்காட்டிய திக்கை அவர்கள் ஆவலுடன் உற்றுப் பார்க்கிறார்கள்.

மரங்கள் அடர்ந்த காட்டுக்குள்ளேயிருந்து ஒருவன் வருகிறான். அவன் வேறு யாருமில்லை; பல்லவ நாட்டு ஒற்றர் தலைவன் சத்ருக்னன்தான், மற்றவர்களைப் போல் அன்றிச் சத்ருக்னன் நன்றாக க்ஷவரம் செய்து கொண்டு சுத்தமான முகத்துடன் விளங்குகிறான். அதிலிருந்தே அவன் நகரத்துக்குப் போய் வருகிறான் என்று அறிந்து கொள்ளலாம்.

தோளிலே துணிப்பை தொங்க வந்த சத்ருக்னனை ஐந்து பேரும் சூழ்ந்து கொண்டார்கள். ''சத்ருக்னா! காயா? பழமா சீக்கிரம் சொல்!'' என்றார்கள்.

''பழந்தான்'' என்று சொல்லிக் கொண்டே, சத்ருக்னன் தோளில் தொங்கிய பையை எடுத்து அவிழ்த்தான்.

அதிலிருந்த பழங்கள் கீழே விழுந்து உருண்டு ஓடின. அவற்றைப் பொறுக்குவதற்கு எல்லாரும் பட்ட அவசரத்திலிருந்து அவர்கள் எவ்வளவு தூரம் பசித்திருந்தார்கள் என்று தெரிய வந்தது.

பசித்ததோ, இல்லையோ தரையில் விழுந்த பழங்களின் மேல் கவனம் செலுத்தாமல், சத்ருக்னன் என்ன சொல்லப் போகிறான் என்பதிலேயே கவனம் செலுத்திய ஒருவரும் அவர்களில் இருந்தார்.

அவர்தான் மாமல்லர் என்று சொல்ல வேண்டியதில்லை.

''சத்ருக்னா! பழம் என்கிறாயே? அப்படி என்றால் என்ன? சிவகாமியைப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

''ஆம் பிரபு, பார்த்தேன்!'' என்று கூறி மறுபடியும் சத்ருக்னன் மௌனம் சாதித்தான்.

''ஏன் இப்படிப் பேசாமல் நிற்கிறாய்? மேலே சொல், சத்ருக்னா! எங்கே பார்த்தாய்? எந்த நிலையில் பார்த்தாய்?'' என்று மாமல்லர் கேட்டார்.

''பிரபு! சிவகாமி அம்மையைப் பார்த்தேன். சௌக்கியமாக இருக்கிறார். கவலைக்கு ஒரு காரணமும் இல்லை. எங்கே பார்த்தேன். எப்படிப் பார்த்தேன் என்பதை விவரமாகச் சொல்ல வேண்டும். எல்லாரும் உட்காருங்கள், சொல்கிறேன்!'' என்றான் சத்ருக்னன்.

அவ்வண்ணமே அனைவரும் பாறை மீது உட்கார்ந்தார்கள். சத்ருக்னன் சொல்லத் தொடங்கினான்:

''நேற்று மாலை வளையல் வியாபாரியின் வேஷத்தில் வாதாபி நகருக்குள் பிரவேசித்தேன். கோட்டை வாசலுக்குள் பிரவேசிப்பதில் எவ்விதக் கஷ்டமும் இருக்கவில்லை. ஜனங்கள் தாராளமாய் நகருக்குள் வந்து கொண்டும், போய்க் கொண்டுமிருக்கிறார்கள். எந்த எதிரியின் படையெடுப்பை யாவது எதிர்பார்த்தால் அல்லவா கோட்டையில் கட்டுக்காவல் வைக்கப் போகிறார்கள்? வாதாபியின் வீரப்படைகள் எட்டுத் திசையும் சென்று திக்விஜயம் செய்து கொண்டிருக்கும்போது....''

அச்சமயம் சேனாதிபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''என்ன உளறுகிறாய்; சத்ருக்னா! திக்விஜயமாவது மண்ணாங்கட்டியாவது? தென்னாட்டுக்குச் சென்ற வாதாபிப் படைகள் தோற்றுத் திரும்பி ஓடி வந்திருக்கின்றன! வேங்கிக்குப் போன சளுக்க சைனியத்தின் பாடும் ஆபத்துத்தான் என்று தெரிகிறது. அப்படியிருக்க வாதாபிப் படைகளின் திக்விஜயமாவது....? என்றார்.

சத்ருக்னன் பணிவுடன் கூறினான்; ''சேனாபதி! வாதாபிப் படைகளின் திக்விஜயம் என்று நான் கூறியது என்னுடைய சொந்த மொழியல்ல. வாதாபி நகரத்தின் பிரதான நாலு வீதிச் சந்திப்பிலே ஒரு நெடிதுயர்ந்த ஜயஸ்தம்பம் நாட்டியிருப்பதைப் பார்த்தேன். அந்த ஜயஸ்தம்பத்திலே பிராகிருத மொழியில் எழுதியிருக்கும் மொழிகளையும் படித்தேன். கிட்டத்தட்ட அதில் எழுதியிருப்பதை ஞாபகம் உள்ள வரை அப்படியே சொல்லிப் பார்க்கிறேன்;

''மகா ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட ரணதுங்க சூர சளுக்க குலதிலக சப்தலோக தேவேந்திர புலிகேசிச் சக்கரவர்த்தி தென் திசையை நோக்கி விஜயம் செய்யப் புறப்பட்டுச் சென்று மகேந்திர பல்லவனை வடபெண்ணைக் கரையில் முறியடிக்க, மகேந்திரன் போரில் புறமுதுகிட்டோடிக் காஞ்சிக் கோட்டைக்குள் பதுங்கிக் கொள்ள, புலிகேசிச் சக்கரவர்த்தி மேலும்

அமரர் கல்கி

தெற்கு நோக்கித் திக்விஜயம் கிளம்பிக் காவேரி நதிக்கு யானைப்பாலம் அமைத்துக் கடந்து, அங்கே சக்கரவர்த்தியிடம் அடைக் கலம் புகுவதற்குக் காத்திருந்த சேர சோழ களப்பாள பாண்டிய மன்னர்களின் சிரங் களில் தம் திருப்பாத கமலங்களை வைத்து அருள் புரிந்து, திரும்புங்காலையில், காஞ்சிக் கோட்டையைப் பலங்கொண்டு தாக்க, மகேந்திர பல்லவன் சரணாகதி யடைந்து காப்பாற்ற வேண்டும் என்று காலில் விழுந்து கெஞ்ச, அவ்விதமே மகேந்திரனுக்கு அருள் புரிந்து, அவ னுடைய உபசாரங்களையும் காணிக்கைப் பொருள்களையும் ஏற்றுக் கொண்டு, தென்னாட்டின் திக்விஜயத்தைப் பூர்த்தி செய்து, ஜயபேரிகை முழக்கி, வெற்றிச் சங்கு ஊதி, வாதாபி நகரத்துக்குத் திரும்பி வந்தது சாலிவாகன சகாப்தம் நாளது ஆண்டு, திங்கள், தேதி; கடல் சூழ்ந்த நில உலகம் உள்ளவரையில் இந்த வாதாபி நகரமும் இந்த திக்விஜய ஜயஸ்தம்பமும் சளுக்க சக்கரவர்த்தி குலமும் என் றென்றைக்கும் நின்று நீடித்துப் பொலிந் தழைத்து விளங்குவதாக!''

இவ்விதம் சத்ருக்னன் கூறி வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள், ''என்ன



பொய்! என்ன கர்வம்! அந்த ஸ்தம்பத்தை இடித்துத் தள்ளாமல் விடுவதில்லை'' என்றெல்லாம் கூறினார்கள்.

சிறிது அவர்கள் இடங் கொடுத்ததும், சத்ருக்னன் மேலும் கூறினான் :- ''பிரபு, அந்த ஜயஸ்தம்பத்தில் இவ்விதம் நான் படித்ததும் என்னை நான் மறந்து விட்டேன். ஸ்தம்பத்தை நோக்கி ஒரு உதை விடலாம் என்று எண்ணிக் காலையும் தூக்கி விட்டேன். கடவுள் அருளால் நல்ல சமயத்தில் எதற்காக வாதாபி நகருக்கு வந்தோம் என்பது ஞாபகம் வந்தது. ஏதோ கால் தடுக்கி விழுந்தவனைப்போல் தொப்பென்று கீழே விழுந்து சமாளித்துக் கொண்டேன். வீதியில் ஜனக்கூட்டம் 'ஜேஜே' என்று இருந்தது. யாராவது பார்த்திருந்தால் விபரீதமாய்ப் போயிருக்கும்!'' என்று கூறி நிறுத்தினான்.

''சத்ருக்னா! வாதாபிக்கு வந்த காரியம் உனக்கு நினைவில் இருந்தது பற்றிச் சந்தோஷம். ஆனால் அதைப்பற்றி இன்னமும் நீ சொல்லவில்லை!'' என்று மாமல்லர் கோபம் தொனிக்கக் கூறினார்.

''பிரபு! மன்னிக்க வேண்டும். சளுக்கர்களின் பொய் சொல்லும் திறமைக்குச் சிறந்த ஞாபகச்சின்னமான அந்த ஜயஸ்தம்பத்தை விட்டு மேலே கிளம்பிச் சென்றேன். வாதாபி நகரின் மிதமிஞ்சிய ஐசுவரிய போகத்துக்கும் வாதாபி மக்களின் படாடோப வாழ்க்கைக்கும் பல அறிகுறிகளைப் பார்த்துக் கொண்டு போனேன். இந்தப் பெரிய நகரத்தில், - கிழக்கு மேற்கிலும் தெற்கு வடக்கிலும் குறைந்தது காத தூரமுள்ள இந்தப் பிரம்மாண்டமான பட்டணத்தில், - சிவகாமி அம்மையை எப்படித் தேடுவது, யாரை விசாரிப்பது என்று சிந்தனை செய்து கொண்டே போனேன். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல், அடுத்தாற் போல் வந்த நாற்சந்தி வீதி முனையில் அம்மையைச் சந்தித்தேன்....''



''என்ன? நாற்சந்தி முனையிலா?'' என்று பல குரல்கள் ஏக காலத்தில் எழுந்தன.

''ஆம்; நாற்சந்தி முனையிலேதான் பார்த்தேன். அம்மை அங்கே செய்து கொண்டிருந்த காரியத்தைக் கேட்டால் நீங்கள் பெரும் ஆச்சரியப்படுவீர்கள். எனக்கும் பார்த்தவுடனே ஆச்சரியமாயிருந்தது; வேதனையாகக் கூட இருந்தது. ஆனால், விசாரித்து விஷயம் தெரிந்து கொண்டதும் அளவில்லாத பெருமை அடைந்தேன். பிரபு! தமிழகத்துப் பெண்குலத்தின் பெருமையைச் சிவகாமி அம்மை நிலைநாட்டி விட்டார். நூறு காத தூரத்துக்கு அப்பால் எதிரிகளின் கோட்டையில் அநாதையாகவும் தன்னந்தனியாகவும் இருக்கும் நிலைமையில் அம்மையார் தமிழகத்துப் பெண் குலத்தின் தயாள குணத்தை நிலை நாட்டியிருக்கிறார்...''

''சத்ருக்னா! ஏன் இப்படி வளைத்து வளைத்துப் பேசிக் கொண்டிருக்கிறாய்? சிவகாமி என்ன காரியம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தாய்?'' என்று மாமல்லர் கடுமையான குரலில் கேட்டார்.

''பிரபு சொல்லி விடுகிறேன். வாதாபி நகரின் நாற்சந்தியில் சிவகாமி அம்மை நடனம் ஆடிக்கொண்டிருந்தார்!....''

''ஆகா!'', ''இது என்ன?'' ''அவமானம்! அவமானம்!'' ''இதைத்தானா தமிழகத்துக்குப் பெருமை என்று சொன்னாய், சத்ருக்னா!'' என்று தலைக்குத் தலை கூவினார்கள்.

''மன்னிக்க வேண்டும். கொஞ்சம் பொறுத்துக் கொண்டு மீதியையும் கேளுங்கள். சிவகாமி அம்மை ஒரு பெருங் கும்பலுக்கு மத்தியில் நின்று ஆடுவதைப் பார்த்ததும் எனக்கும் சொல்ல முடியாத அவமானம் உண்டாயிற்று. கோபமும் ஆத்திரமும் பொங்கிக் கொண்டு வந்தன. கூட்டத்தில் நின்ற வாதாபி மக்கள் கொச்சையான பாஷையில் பேசிக் கொண்ட அருவருப்பான வார்த்தைகளைக் கேட்டதும் என் காதுகள் கொப்பளித்தன; ஓடிப் பாய்ந்து அம்மையின் முன் சென்று, 'நிறுத்துங்கள் இந்த அவமானத்தை!' என்று கூவ வேண்டும் என்பதாக ஆத்திரம் உண்டாயிற்று. நல்ல வேளையாக அந்தச் சமயத்தில், நடனமாடிய அம்மைக்குப் பின்னால் நின்றவர்கள் மீது என் பார்வை விழுந்தது. ஆகா! அதை எப்படிச் சொல்வேன்? தமிழகத்தைச் சேர்ந்த ஸ்திரீ புருஷர்கள் பலரை அங்கே கையைப் பின்னால் சேர்த்துக் கட்டி நிறுத்தியிருந்தார்கள். அவர்களுக்கிடையே கையில் சாட்டை பிடித்த யமகிங்கரர் போன்ற மனிதர்கள் சிலர் நின்று கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சியைக் கண்டதும் பிரமித்து நின்றுவிட்டேன். பிரமை நீங்கிய பிறகு கூட்டத்திலிருந்தவர்களின் பேச்சுக்களை ஒற்றுக் கேட்டும், சந்தேகம் தோன்றாதபடி விசாரித்தும், மேற்படி அதிசயக் காட்சியின் காரணத்தை நன்கறிந்து கொண்டேன்....''

பிறகு சத்ருக்னன், சிவகாமி அம்மை நாற்சந்தியில் நடனமாட நேர்ந்தது ஏன் என்னும் காரணத்தைத் தான் தெரிந்து கொண்டபடி அவர்களுக்குக் கூறினான். ''தமிழகத்து ஆடவர் பெண்டிரைக் கொடுமையான சாட்டையடித் தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகவே சிவகாமி நடனமாடுகிறாள்'' என்று தெரிந்ததும் மாமல்லர் முதலியவர்களுக்குத் தேகத்தில் புளகாங்கிதம் உண்டாயிற்று.

மேலே நடந்ததைப் பற்றி ஆவலுடன் கேட்டார்கள்.

''இனிய கானத்தைக் கேட்ட நாகசர்ப்பத்தைப் போல் நான் சிவகாமி அம்மையின் நடனத்தைப் பார்த்துக் கொண்டு பிரமித்து நின்றேன். அம்மை நடனத்தை முடித்துச் சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு திரும்பினார். திரும்பியதும் சில கண நேரம் அவருடைய கண்களில் சொல்ல முடியாத வியப்பும் திகைப்பும் காணப்பட்டன.

''அவர் பார்த்த திசையை நானும் நோக்கினேன்; அங்கே யார் நின்றது என்று நினைக்கிறீர்கள்?....''

''யார்? யார்?'', ''புலிகேசியா?'' என்று கேள்விகள் எழுந்தன.

''இல்லை நம் சிநேகிதர் நாகநந்திதான்!'' என்றான் சத்ருக்னன்.

(தொடரும்)



''எனக்கு லஞ்சம் வாங்கறதை விட, மாமூல் வாங்கறதுதான் பிடிக்கும்!''

''என்னங்க வித்தியாசம்?''

''லஞ்சம்னா ஒருத்தர்கிட்டே ஒரு தடவை வாங்கறது. மாமூல்னா ஒருத்தர் கிட்டேயே பல தடவை வாங்கறதாச்சே!''

- நீலமேகம்

# சீமாச்சு வீட்டில் ஸ்டார் டி.வி.!



"கூடாது! கூடாது! கூடாது!" - கோர்ட் சிப்பந்தி கூவுகிறார்ப் போல் மும்முறை கூவினாள் பாரியாள். பட்டால்தான் தெரியும் புருஷனுக்கு! ஆணாகப் பிறந்தால் ஆசைப்படக் கூடாது. அப்படியே ஆசைப் பட்டாலும் வாக்குறுதி மட்டும் அளிக்கக் கூடாது.

பக்கத்துத் தெரு பாலு, "உலகத்தையே உன் பெட்ருமினுள் கொண்டு வந்து காட்டுகிறேன். எந்த நேரத்தில் நீ 'டி.வி.'யை ஆன் செய்தாலும் படம் பார்த்துக் கொண்டிருக்கலாம்," என்ற போது மனத்திற்குள் பல வெள்ளைப் புடைவைகள் ஸ்லோமோஷனில் தம் தனனம் பாட ஆரம்பித்தன.

"இப்பத்தான் ஜெயராமன் வீட்ல கனெக்ஷன் கொடுத்துட்டு வரேன்."

- இதை பாலு சொன்ன மாத்திரத்தில், நம்ம வீட்டிலும் ஸ்டார் டி.வி. கனெக்ஷன் கொடுக்க வேண்டுமென்ற வேகம் பிறந்தது.

பாலுவிடம் என் ஒப்புதலைக் கொடுப்பதற்கு முன்பாக வீட்டிலிருக்கும் மனைவியை... ஒரு துளி... அதிகமில்லை... ஒரு துளியாவது நினைத்திருக்க வேண்டும். இதைத்தான் ஆண் புத்தி அவசர புத்தின்னு சொல்லணும். ஒரு பக்கம் பாரியாள் - இன்னொரு பக்கம் பாட்டி!

"எனக்குப் பொழுதே போகலே. பல்லாங்குழி வாங்கிக் கொடுன்னு மாமாங்கமா நான் அழுதுண்டிருக்கேன். வாங்கிக் கொடுக்க வக்கில்ல. பெரிய்ய ஸ்டார் டி.வி.யாம். ஸ்டார் டி.வி." - நேரம் பார்த்து ஆரம்பித்து விட்டாள் பாட்டி.

"உனக்குப் பல்லாங்குழிக்கு ஏற்பாடு செய்தாச்சு. ஸ்டார் டி.வி.யோட அதுவும் வர்றது."

"என்னவோ பண்ணிக்கோ! ஏண்டா உங்க ஸ்டார் டி.வி.ல 'உலாவரும் ஒளிக் கதிர்' வருமா?"

"என்ன அப்படிக் கேட்டுட்டேள். ஸ்டார் டி.வி.ன்னாலே 'உலாவரும் ஒளிக் கதிர்' என்றுதான் அர்த்தம். ஹாங்காங்கிலிருந்து நம்ம வீட்டுக்கு ஒளிக்கதிரா உலா வர்றதுக்குப் பேர்தான் ஸ்டார் டி.வி."

"தோ பாருங்க! ஸ்டார் டி.வி.க்கு இந்த வீட்ல கனெக்ஷன் கொடுத்தா நம்ம கனெக்ஷன் கட் ஆயிடும்" - உக்கிரமாகச் சீறினாள் பாரியாள்.

"ஆஹா! ஒரே சமயத்துல ரெண்டு நல்ல விஷயம் நடக்கப் போறது. 'கஷ்டம் போய் கனெக்ஷன் வந்தது டும் டும் டும்' என்று கத்தணும் போலிருந்தது. ஆனாலும் என்னுடைய புருஷ லட்சணமான பயம் என் சந்தோஷத்தைச் சாம்பலாக்கியது.

இந்திய கிரிக்கெட் அணி மாதிரி வழக்கமான இன்னொரு தோல்விக்கு நான் தயாரான போதுதான், அந்த கழுத்துகளுக்கும் திருப்பம் நிகழ்ந்தது.

"அத்திம்பேர்!" என்ற குரல் வந்த திசையில் என் கழுத்து 90 டிகிரி ஆங்கிளில் திரும்ப, 'கை குடுங்கோ அத்திம்பேர்' என்று என் கையை ஒரு உலுக்கு உலுக்கினான். ஒன்றும் புரியாது முழித்துக் கொண்டிருந்த எங்களிடம், "ஹய்யா! இனிமே குஷால்தான். இனிமே உலகக் கோப்பை கிரிக்கெட் பந்தயங்களை அத்திம்பேர் தயவால் ஸ்டார் டி.வி.யில் பார்க்கலாம்."

- என்றுமே உபத்திரவம் என்று நான் நினைத்திருந்த என் மச்சான் எனக்கு இப்போது ஆபத்பாந்தவனாக வந்து சேர்ந்தான்.

**தமாஷ்வாலா**

கூடப் பிறந்தவன் ஸடார் டீ.வி. பார்க்க வேண்டும் என்றவுடனே பாரியாள் அரசியல்வாதி கணக்காக அந்தர்பல்டி அடிக்க ஆரம்பித்தாள்.

''என்கிட்டே ஒண்ணும் கேக்காதீங்க. நீங்க சம்பாதிக்கிறீங்க. நீங்க பணம் கொடுக்கப் போறீங்க. ரெண்டாவது நா சொல்லி நீங்க கேட்கப் போறதில்லே.''

உடன்பிறந்தோன் பார்க்க வேண்டுமென்பதற்காகத் தன் முடிவை மாற்றிக் கொண்ட என் தர்மபத்தினி, இந்த வீட்டில் எல்லாம் என் இஷ்டப்படி நடக்கிறார் போல் ஒரு பிரமையை உண்டுபண்ணினாள்.

சினிமாவில், உச்சகட்டக் காட்சியில், எல்லாம் முடிந்தபின் குற்றவாளியை அரெஸ்ட் செய்ய வருகிற போலீஸ் மாதிரி எங்கள் வீட்டு வாசலில், ஜங்க்ஷன் பாக்ஸ், கேபிள் சகிதமாக இரண்டு பேர் வந்தனர். நொடியில் கனெக்ஷன் கொடுத்து விட்டு அட்வான்ஸ் பணம் ரூ 500, முதல் மாதத் தவணை ரூ 100 ஐ பெற்றுக் கொண்டு மறைந்து விட்டனர்.

ஸ்போர்ட்ஸ் சானலில் நடந்து கொண்டிருந்த பனிச்சறுக்கு விளையாட்டை நான் பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்த போதுதான், அந்தப் பாழாய்ப் போன பவர்கட் வந்தது. அரை மணி கழித்து வந்த பவர், ஒரு கணத்தில் மின்னலாக மறைந்தது. எதிர் வீடு, பக்கத்து வீடு என்று ஒவ்வொரு வீடாகக் கரண்ட் வந்து கொண்டிருக்க எங்கள் வீட்டுக்கு மட்டும் கரண்ட் வருவதான தடயமே இல்லை. காத்து காத்து சோர்ந்ததுதான் மிச்சம். என்னையறியாது நான் கண் அயர்ந்த போது காது ஜவ்வு கிழிகிறார் போல் பெரும் சப்தம்.

''அடப்பாவி! கடங்காரா! நீ உருப்படுவியா'' என்று ஆவேசமாகக் கத்திக் கொண்டிருந்தாள் பாட்டி.

''அர்த்த ராத்திரியில் பிசாசு மாதிரி கத்தறியே? என்ன ஆச்சு உனக்கு?''

''ஆமாண்டா! இந்த பிசாசுகளைப் பார். என்னடா இது! துணிப் பஞ்சம் வந்த மாதிரி உடுத்திக்கிட்டுப் பேய் ஆட்டம் ஆடறதுகளே இந்தச் சனியன்கள். கண்றாவி! கண்றாவி!''

டீ.வி.யை அணைத்து விட்டுப் படுத்தவன் மறுநாள் விடியற்காலை மூன்று மணிக்கு மச்சினன் அண்ட் கம்பெனியினர் போட்ட சத்தத்தில் எழுந்து கிரிக்கெட் மாட்ச் பார்க்க உட்கார்ந்து விட்டேன். சிறிது நேரம் கூட பார்த்திருக்க மாட்டேன். உள்ளிருந்து பாரியாள், ''என்னங்க! கொஞ்சம் வர்றீங்களா?'' என்றாள்.

''என்ன வேணும்?''

''எக்ஸ்ட்ரா பால் வாங்கிண்டு வரணும்.''

''நல்ல மாட்ச் நடந்துண்டிருக்கும் போது தொந்தரவு செய்யாதே. நான் போக முடியாது.''

''போலேன்னா உங்களுக்குக் காப்பி கிடையாது.''

''நம்ம வழக்கமா வாங்கற பால் என்னாச்சு?''

''உங்க மச்சினன், மச்சினன் ப்ரெண்ட்சுக்குக் காப்பியா போச்சு.''

வேற வழியில்லாமல் அலுத்துக் கொண்டே ஆட்டோமாடிக் பால் பூத்தில் தூங்கி வழிந்து கொண்டிருந்த கூட்டத்திடையே நின்றிருந்தேன்.

கிட்டத்தட்ட ஒரு மணி நேர மாட்ச் பாழ். வீடு வந்ததும் குளித்து, காப்பி குடித்து, ஆபீஸ் கிளம்பத்தான் நேரமிருந்தது. என் செலவில் என் மச்சான் அனுபவித்துக் கொண்டிருந்தான்.

ஆபீசில் நுழைந்ததுதான் தாமதம் மேனேஜர் உள்ளே கூப்பிட்டார்.

''குட்மார்னிங் சார்!''

''ம்ம்ம்.''

''என்ன சார் கூப்பிட்டீங்களா?''

''ஆமாம்! நம்ம மதுரை பிராஞ்ச்ல இன்னும் ஆடிட் முடிந்தபாடில்லை. நீ என்ன பண்றே. இன்னிக்கோ நாளைக்கோ மதுரை போய் ஆடிட் வேலையை முடித்து விட்டு மெதுவாக வா. ஒரு மாசம் ஆனாலும் பரவால்லை.''

WORLD CUP நடக்கற இந்த நேரத்துலயா டூர் அனுப்பணும். என் தலையெழுத்து!

''என்ன யோசிக்கிறே?''

''இல்ல சார்... இப்பத்தான்...''

''எனக்கு எல்லாம் புரியுது. கவலைப்படாதே. ரயில் டிக்கெட் கிடைக்கலேன்னா ப்ளேன்ல போ. ஓ.கே. ஆல் தி பெஸ்ட்!''



**நா**ன் எந்த வேளையில் ஸ்டார் டீ.வி. கனெக்ஷன் கொடுத்தேனோ தெரியவில்லை. எனக்கு ஒருநாள் அதை அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. மதுரையில் ஆடிட் முடித்து வருவதற்கு இருபது நாள் ஆகி விட்டது. வந்தவுடன் நேராக டீ.வி.யை ஆன் செய்யப் போன போது, ''அய்யய்யோ! அங்கே போகாதீங்க'' என்று என் மனைவி கத்தினாள்.

''ஏன்?''

''டீ.வி. KNOB சரியில்லை. என் தம்பி சந்துரு வரட்டும். அவனுக்குத்தான் KNOB இல்லாமல் எப்படி ஆன் செய்யறதுன்னு தெரியும்.''

''அடப்பாவி! தரித்திரம் இந்த வீட்டுக்கு மாட்ச் பார்க்க வரேன்னு சொல்றப்பவே தெரியும், இந்த டீ.வி.க்குச் சனி பிடிச்சுடுத்துன்னு...''

''பாவம்! அவனை ஏன் அநாவசியமா கரிச்சுக் கொட்றீங்க. நீங்க வாங்கின டீ.வி. லட்சணம் அப்படி. நேத்திக்கு அவன் டீ.வி. போட போனப்ப KNOB கையோட வந்துடுத்து. அவன் வரட்டும்.

''ஏன்! வந்து மிச்ச மீதியையும் உடைச்சுட்டுப் போறதுக்கா?'' என்று ஆத்திரத்துடன் கேட்டு விட்டு டீ.வி. கம்பெனிக்கு போன் செய்து ரிப்பேர் விஷயத்தைச் சொன்னேன்...

''முதல்ல இங்கே நேர்ல வந்து நூறு ரூபாய் டெபாசிட் கட்டிட்டு 'கம்ப்ளெயின்ட்' ரெஜிஸ்டர் பண்ணிக்குங்க சார்...'' என்றது மறுமுனை.

போனை வைத்த கையோடு தலையில் கை வைத்துக் கொண்டு அப்படியே நான் சாய்ந்த போது, வாசலில் இருந்து, ''சார்'' என்ற குரல் வந்தது!

''உள்ளே வாங்க. யாரு நீங்க?''

''என்ன சார் மறந்துட்டீங்க! நாங்கதான் சார் ஸ்டார் டீ.வி. கனெக்ஷன் கொடுத்தோமே...''

''இப்ப என்ன வேணும் உங்களுக்கு?''

''இந்த மாசம் நீங்க கொடுக்க வேண்டிய நூறு ரூபாய்க்காக வந்திருக்கோம்...''

''..................''



தெற்குக் கொரியாவில் சாலை நெருக்கடி அபரிமிதமாகி விட்டது. 'Traffic Hell' என்று அந்த நாட்டவர்கள் அதற்குச் 'செல்லப் பெயர்' சூட்டியிருக்கிறார்கள்.

இந்த நரகத்திலிருந்து மக்களை விடுவிக்கச் சபதம் எடுத்துள்ளார் அதிபர் ரோ டே வூ (Roh Tae Woo) இதற்கான ஒரே வழி சூப்பர் ஃபாஸ்ட் ரயில் போக்குவரத்தை அறிமுகப்படுத்துவதுதான் என்று உணர்ந்து ஒரு திட்டமும் வகுத்திருக்கிறார். 8.3 பில்லியன் டாலர் செலவு பிடிக்கும் இந்த அதிவேக ரயில் திட்டம் 1999க்கு முன்னர் அமைக்கப்பட்டு விடும். இந்த ரயில்கள் மணிக்கு நானூறு கிலோ மீட்டர் வேகத்தில் ஓடக்கூடியவை. இவற்றில் பயணம் செய்வது சொகுசாகவும் இருக்கும்.

தென் கொரியாவின் இத் திட்டம்



☛ ஷின்கான்ஸென் - ஜப்பான்

# அலுங்காமல் ஓடும் அதிவேக ரயில்கள்!

சில ஐரோப்பிய நாடுகளிலும் ஜப்பானிலும் எக்கச்சக்கப் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. காரணம், இந்த நாடுகளெல்லாம் இந்த ரயில் திட்டத்தைத் தென்கொரியாவில் அமைத்துத் தரும் காண்ட்ராக்டைப் பெற போட்டி போடுவதுதான்.

காண்ட்ராக்டை வழங்கும் இறுதி முடிவு தெ. கொரிய அதிப

☛ டி.ஜி.வி.
- பிரான்ஸ்



ருடையதாகவே இருக்கும். இதில் அரசியல் தலையீடு இருக்காது என்று சொல்லப்படுவதை யாரும் நம்பத் தயாராயில்லை. ஏற்றுமதிகளில் தங்கள் நாட்டுடன் கடுமையாகப் போட்டியிடும் ஜப்பானிடம் காண்ட்ராக்டைத் தர தென் கொரிய அரசுக்கு மனமில்லை.

ஃப்ரெஞ்சு காண்ட்ராக்ட் மலிவாகவும் அதன் ரயில்கள் மற்றவற்றை விட மிக வேகமாகவும் (மணிக்கு 513 கிலோ மீட்டர்) இருப்பதால் ஃப்ரான்ஸ் நாட்டின் TGV- train à grande Vitesse நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்யப்படும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

தென் கொரிய அதிபர் பாரிஸ் சென்றிருந்த போது TGV ரயிலில் சொகுசு சவாரி ஏற்பாடு செய்த பிரெஞ்சு அரசாங்கம், கடந்த அக்டோபரில், சில கொரிய பத்திரிகையாளர்களை அழைத்து பிரெஞ்சு அதிவேக ரயில் அமைப்பை



''என் மனைவி உள்பட எல்லாருமே என்னைக் கண்டால் ஏன் பயப்படறாங் கன்னு தெரியலை.''

''யாரைப் பார்த்தாலும் ஜோக் சொல்ற பழக்கத்தை உடனே நிறுத்துங்க; எல்லாம் தன்னால சரியாப் போயிடும்!''

— சீர்காழி. வி. ரேவதி

திட்டம் இந்த சூப்பர் ரயில் ப்ராஜெக்ட் என்று குறைகூறியும் வருகிறார்கள். ஆனால் அதிபர் ரோ தம் முடிவில் பிடிவாதமாய் இருக்கிறார். தென் கொரியாவுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும் நாடு, ரயில் திட்டத்தை அமைத்துத் தருவதுடன் தொழில் நுட்பத்தையும்



■ ஐஸ் - ஜெர்மனி

விளக்கிக் காண்பிக்கவும் செய்தது. இதற்கான செலவில் ஒரு பகுதியை TGV நிறுவனமே ஏற்றது!

பல தென் கொரியர்கள், தங்களைப் போன்ற வளரும் நாட்டுக்குக் கட்டுப்படியாகாத கனவுத்

கற்றுத் தர வேண்டும் என்றும் அந்தத் தொழில் நுட்பத்தைப் பின்னர் தாங்கள் வேறு நாடுகளுக்கு விற்கவும் அனுமதிக்க வேண்டும் என்றும் நிபந்தனை விதித்துள்ளார்.

ஆதாரம் : நியூஸ்வீக்

# மௌனம் கலைத்த மயக்கம்

"அங்கிள்...!"

எழுதிக் கொண்டிருந்த நான் நிமிர்ந்து பார்த்தேன்.

எதிரில்... பக்கத்து வீட்டுப் பெண்...

"அடடே...! பாரதியா...? வாம்மா...!"

"உள்ளே வரலாமா அங்கிள்...?"

வழக்கமாகப் பனிச்சாரல் போல் ஜிலு ஜிலுவென்றிருக்கும் அவளுடைய குரல் வறண்டிருந்தது.

"என்னம்மா இது... கேள்வியே வித்தியாசமா இருக்கே...! இது உன் வீடு மாதிரி... சொந்த வீட்டுக்குள்ளே வர்றதுக்கும் போறதுக்கும் யாராவது பர்மிஷன் கேப்பாங்களா? அதிருக்கட்டும். இதுவரைக்கும் எத்தனை தடவை எங்கிட்ட பர்மிஷன் வாங்கிட்டு உள்ளே வந்திருக்கே...?"

எனது பதில் அவள் மனத்தில் மிருதுவாய் ஒத்தடம் கொடுத்திருக்க வேண்டும். ஏதோ வலி குறைந்தவள் போல அவள் முகத்தில் ஒருவித இதம் படர்வது தெரிந்தது.

"என்னமோ... கேட்கத் தோணுச்சு... கேட்டேன்..."

அவள் தயங்கித் தயங்கி உள்ளே வந்தாள். இந்தத் தயக்கம்.. அவளுக்குப் பழக்கமில்லாத ஒன்று. அவளுக்குத் தெரிந்த நடை என்பது துள்ளலாய் ஓடுவதுதான். கூடவே இனிய சங்கீதமாய் வாய் ஏதாவது முணு முணுத்துக் கொண்டேயிருக்கும்.

இவையெல்லாம் அவளிடம் இப்போது சுத்தமாய்த் தொலைந்து போயிருந்தன.

நான் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டேன். கூடவே ஒரு நிம்மதியும் பூத்தது.

என் எதிரில் கிடந்த பிரம்பு நாற்காலியைக் கொஞ்சம் தொலைவில் தள்ளிப் போட்டுக் கொண்டு அதன் நுனியில் பட்டும் படாமலும் அமர்ந்து கொண்டாள் - ஏதோ தெருப்பில் உட்கார்ந்திருப்பது போல. இதுவும் வழக்கத்துக்கு மாறானதுதான்.

இந்த பிரம்பு நாற்காலியில் அவள் பல முறை உட்கார்ந்திருக்கிறாள். நாற்காலி முழுமையும் வியாபித்து நன்றாகச் சாய்ந்து அமர்ந்து, கால் மேல் கால் போட்டுக் கொண்டு மிகவும் ஒய்யாரமாய் அமர்ந்து கொள்வாள்... எழுதிக் கொண்டிருக்கும் என்னை எழுத விடாமல் வம்பளப்பாள். வாய் கலகலக்கும். கண்கள் பளபளக்கும். இவள் நிச்சயமாய்... அவள் இல்லை.

"பசங்க ரெண்டும் டியூஷனுக்கா அங்கிள்...?"

"ஆமாம்மா!"

"ஆன்ட்டி...?"

"கோவிலுக்கு..."

'நல்லவேளை...!' என்ற திருப்தி அவள் முகத்தில் ரகசியமாய்ப் பரவுவதை நுட்பமாய்க் கவனித்துக் கொண்டேன்.

சற்று நேரம் பொய்யான அமைதி.

"பஸ் ஸ்டாண்டிலிருந்து வீட்டுக்கு வரும் போது எங்க வீட்டு வழியாத்தானே வந்தீங்க அங்கிள்...?"

"ஆமா...!"

"எங்க வீட்டு வாசல்லே அப்பா பூச் செடிகளுக்குத் தண்ணீர் ஊத்திக்கிட்டு இருந்தாரே... பார்க்கலை?"

"பார்த்தேனே...!"

மறுபடியும் அவளிடம் கொஞ்சம் மௌனம்...

"அவர்கிட்டே எதுவும் சொல்லத் தோணலையா?"

"எதைப் பத்தி...?"

அவள் சற்றுத் தடுமாறிப் போயிருக்க வேண்டும். நிதானித்தாள்.

"எதைப் பத்தியுமே...!" இதைச் சொல்லும் போது அவள் தலை தாழ்ந்திருந்தது.

"ஏதாவது இருந்தால்தானே சொல்றதுக்கு...!"

"நிஜமாவா...!"

சற்று நேரம் கனத்த மௌனம்... அதைக் கலைத்துக் கேட்டாள் :

"அங்கிள்... எம்மேலே உங்களுக்குக் கோபம்தானே...!"

நான் கடகடவெனச் சிரித்தேன்.

"பைத்தியம். உம்மேலே கோபப்பட யாராலேயும் முடியாதே.. அப்புறம் நான் மட்டும் எப்படிம்மா கோபப்பட முடியும்...?"

அவள் ஆச்சரியமாய் என்னைப் பார்த்தாள்.



''அதுதான் எனக்கு வருத்தமாயிருக்கு அங்க்கிள். எம்மேலே கோபப் படாமே.. ஒண்ணுமே நடக்காத மாதிரி... எங்கிட்ட எப்போதும் போல சிரிச்சுப் பேசறதைத்தான் என்னாலே தாங்கிக்க முடியலை அங்க்கிள்...!''

இப்படிச் சொன்னவளின் கண்களில் சடாரென்று ஈரத்தின் பளபளப்பு.

''டேய்... பாரதி... என்னடா இது...'' என் குரல் கரகரத்தது.

''அது மட்டுமில்லே... அங்க்கிள்... சாயங்காலம் பஸ்ஸிலே என்னை நீங்க அப்படிப் பார்த்ததும் நேரே வீட்டுக்கு வந்து எங்க அப்பாகிட்டே சொல்லி... இந்நேரம் வீடே பூகம்பமா மாறிப் போயிருக்கும்னு நினைச்சுக்கிட்டு பயந்துக்கிட்டே வந்தேன்...!''

''ஹ¨ம்...?''

''அப்படி எதுவுமே நடக்கலையே...! அப்பா எப்போதும் போல் பூச்செடிகளுக்குத் தண்ணீர் ஊத்திக்கிட்டிருந்தார்... அம்மா காப்பி கொண்டாந்து கொடுத்தாங்க... ஆனா என்னாலதான் குடிக்க முடியலே...!''

''ஏன்..?''

அவள் என்னை ஒரு மாதிரி பார்த்தாள்.

உத்தமசோழன்



"சீக்கிரம் அந்த பஸ்ஸைத் துரத்திப் பிடிப்பா!''
"பஸ்லே ஏதாவது முக்கியமான பொருளைத் தவற விட்டுட்டீங்களா சார்?''
"இல்லே! அந்த கண்டக்டர் எனக்கு மீதி பத்து பைசா சில்லறை தரலே...''



"அங்கிள்... ஒண்ணுமே தெரியாத மாதிரி... எதுவுமே நடக்காத மாதிரி பேசி இப்படி சித்திரவதை பண்றதை விட...''

அவள் குரல் முற்றிலுமாக உடைந்து போனது. குனிந்து கொண்டு குலுங்கத் தொடங்கினாள்.

என் மனசு கரைந்து போனது. கொஞ்ச நேரம் அவள் அழட்டும் என்று காத்திருந்தேன்.

பின் எழுந்து, மெதுவாக அவள் தலையை வருடி "ஏய்... என்னம்மா... எதுக்காக இப்படி அழறே...?'' என்றேன்.

"நான் செஞ்சது தப்புதான் அங்கிள்... சாயங்காலம் பஸ்ஸிலே அந்த ஆளோட நான் சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்ததைப் பார்த்தும் உங்களுக்கு ஏன் கோபம் வரலே அங்கிள்...?''

அதை நினைத்தால் இப்போது கூட என்னுள் கோபம் கொப்பளிக்கத்தான் செய்தது. இருந்தாலும் ரொம்பவும் இயல்பாகக் கேட்டேன்.

"எனக்கு ஏன் கோபம் வரணும்? நீ இஷ்டப்பட்டுத்தானே அவனோட பேசிக்கிட்டிருந்தே...?''

"ஓகோ..! அவன் என்ன என்னோட காலேஜ்ல படிக்கிறவனா? இல்லே அண்ணன் தம்பியா? இல்லே...''

"யாரும் இல்லைதான்...!''

"அவனைப் பத்தி உங்களுக்குத் தெரியும். வயசு முப்பத்தஞ்சு ஆகுது. கல்யாணம் ஆனவன். உங்க ஆபீஸ்லேதான் அவன் வேலை பார்க்கிறான்... இதெல்லாம் அவனே எங்கிட்ட சொன்னான்...''

தரையைப் பார்த்தபடியே சொன்னாள்.

"ரொம்ப சரி... எல்லாம் தெரிஞ்ச பிறகும் நீ அவன்கூட சந்தோஷமாப் பேசிக்கிட்டு வர்றப்போ எனக்கு எதுக்கம்மா கோபம் வரணும்...?''

"வாஸ்தவந்தான் அங்கிள்... எனக்கு ஏன் அப்படி புத்தி போச்சுன்னே தெரியலை. ஒரு பத்து நாளைக்கு முன்னாடி காலேஜி லிருந்து பஸ் ஏற ஓடி வர்றப்போ பஸ் புறப்பட்டுடிச்சு. நான் கையை ஆட்டிய படியே ஓடி வந்தேன். கொஞ்ச தூரம் போயி நின்னுடுச்சி... மறுபடியும் ஓடிப் போய் ஏறிக்கிட்டேன். ஏறியதும் எதிரே இவன்தான் நின்னான்... 'நான்தான் உங்களுக்காக பஸ்ஸை நிறுத்தி வைச்சேன்'னான். 'தாங்க்ஸ்'ன்னேன். 'தாங்க்ஸை இதோ என்னோட பாக்கெட்டிலே பத்திரமா வச்சுட்டேன்'னான். எனக்குச் சட்டென்று சிரிப்பு வந்துட்டுது. அவன் சடாருன்னு என்னருகே வந்து யாருக்கும் கேட்காத மாதிரி 'நிஜமாச் சொல்றேன். இவ்வளவு அற்புதமான சிரிப்பை இப்போதான் முதன் முதலா பாக்குறேன்'னான். எனக்கு ஒரு மாதிரியாயிடுச்சு... அப்புறம் நான் ஒண்ணும் பேசலை. அவனும் பேசலை. அத்தோட அன்னைக்கு நான் வீட்டுக்கு வந்துட்டேன்...''

"ஊாம்...?''

"மறுநாள் சாயங்காலம் நான் பஸ்ல ஏறினப்ப அவன் இருக்கிறானா என்று நானே தேடினேன். இருந்தான். என்னைப் பார்த்து லேசாகச் சிரித்தான். நானும் சிரித்தேன்.

"அப்புறம் தினமும் என்னோடு பேச்சுக் கொடுப்பான். அவனோடு பேசுவதில் எனக்கும் சந்தோஷமாகத்தான் இருந்தது. நேத்து தான் சொன்னான்.. 'இப்படி நீ ஒரு சீட்லே... நான் ஒரு சீட்லே உக்காந்துகிட்டுப் போறது ரொம்பக் கஷ்டமா இருக்கு... இப்படி என் பக்கத்திலேயே வந்து உக்காருன்னான்..' எனக்குத் தயக்கமா இருந்துச்சு... 'என்ன நீ.. ஏனிப்படி தயங்குறே...? காலேஜ்லே படிக்கிறவதானே நீ... சும்மா வா'ன்னு இலேசாக என் கையைப் பிடிச்சு இழுத்தான்... நானும் சட்டென்று உட்கார்ந்து விட்டேன். என்னென்னவோ பேசினான். நாளைக்கு வீட்டுக்குப் போகும் போது வேளாங்கண்ணியிலே இறங்கிட்டு, மாதாவைக் கும்பிட்டுட்டு, கடற்கரையைச் சுத்திட்டுப் போவோம்னான்... நான் ஒண்ணுமே சொல்லலை...''

என் மௌனம் நீடித்தது.

"'என்ன பேசாம இருக்கிறே... பயமா இருக்கா...? என்ன நீ.. விவரம் புரியாத பொண்ணாயிருக்கே... இதெல்லாம் இந்தக் காலத்திலே ரொம்ப சர்வசாதாரணம்.. இந்த வயசுலே இப்படித்தான் சந்தோஷமா இருக்கணும்'னான். எனக்கு ஒண்ணும் சொல்லத் தெரியலே.. ஆசையாவும் இருந்துச்சு. பயமாவும் இருந்துச்சு...''

"....''

"அவன் முடிவாச் சொன்னான்... 'நாளைக்கு நாகப்பட்டினம் பஸ் ஸ்டாண்டிலே ரெடியா நிப்பேன். உனக்கும் சேத்து வேளாங்கண்ணிக்கு டிக்கெட் எடுப்பேன். இரண்டு பேரும் அங்கே இறங்குறோம்...'

அவன் இப்படி சொன்ன நேரத்தில்தான் நீங்க முன்புறம் இருந்து சடக்குன்னு எங்களைத் திரும்பிப் பாத்தீங்க... எனக்குச் சப்தநாடியும் ஒடுங்கிப் போச்சு...''

''அப்படியா...! ஏன்..?''

''விளையாடறீங்களா அங்கிள்...! அவனைப் பார்த்துப் பழக ஆரம்பிச்ச இந்த பத்து நாள்லே கிளாஸ்லே என்ன சொல்லித் தந்தாங்கன்னே எனக்குத் தெரியாது. புஸ்தகத்தைத் திறந்தா அதுலே உள்ள வரிகளைக் கண் பார்க்குமே தவிர மனசு கிடந்து அலை பாயும்... ஏதோ ஒரு மயக்கத்திலே இருந்த மாதிரிதான் இருந்துச்சு இந்த பத்து நாளும்... ஆமாம், நிச்சயமா அது ஒரு மயக்கம்தான்...''

''இப்போ...?''

''மயக்கம் தெளிஞ்சு போச்சு அங்கிள்... இந்த வயசுலே மனசு இப்படித்தான் அலை பாயும்... சலனப்படும்.. நாமதான் ஜாக்ரதையாய் இருக்கணும்னு தோணுது.''

''சரி நாளைக்கு அவன்...?''

''கூப்பிடுவான்... வீட்டுக்குப் போயி உம் பொண்டாட்டியைக் கூட்டிக்கிட்டு போன்னு சிரிச்சுக்கிட்டே சொல்லிடுவேன்... நிச்சயமா சலனப்பட மாட்டேன். பிராமிஸ் அங்கிள்...'' சட்டென்று எழுந்து என் கையில் அடித்தாள்.

என்னுள் குபுக்கென்று மகிழ்ச்சி பெருகிற்று.

''என்னை இந்தத் தடுமாற்றத்திலேருந்து காப்பாத்தினது என்ன தெரியுமில்லே... அன்னைக்கு நீங்க பாத்த அந்த நொடி நேரப் பார்வையும்... அப்புறம் ஒண்ணுமே நடக்கலைங்கிற மாதிரி காட்டின மௌனமும்தான்...!''

''அப்படியா...!''

என்னை ஒரு மாதிரி பொய்க் கோபத்துடன் பார்த்த அவள் சிறிது நேரம் அமைதியாய் இருந்து விட்டு பிறகு கேட்டாள்.

''அங்கிள்... எனக்கொரு சந்தேகம். பஸ்லே என்னை அவனோட சேர்ந்து பாத்தப்புறமும் எம்மேலே கோபப்படாம உங்களால எப்படி அங்கிள் இருக்க முடிஞ்சுது...? மழுப்பாம பதில் சொல்லணும்...!''

நான் நிதானமாகச் சொன்னேன்:

''ஓ... அதுவா...! என்னோட பாரதி இருக்காளே... அவ ரொம்ப புத்திசாலி. தப்பு எது சரி எதுன்னு டக்குன்னு புரிஞ்சுக்குவா.. அவளால ஒரு நாளும் தப்பு செய்ய முடியாதுன்னு எனக்குத் தெரியும். அதனால்தான் நான் அலட்டிக்கவேயில்லை. சரிம்மா நீ ரொம்ப களைப்பா இருக்கே. கொஞ்சம் இரு. உள்ளே போய் ஹார்லிக்ஸ் கொண்டாறேன்...''

எழுந்த என்னை, சட்டென்று தோளில் கை வைத்து அழுத்தி உட்கார வைத்து விட்டு ''நீங்க இருங்க அங்கிள்... உங்களுக்கும் சேர்த்து நானே கொண்டாறேன்'' என்று துள்ளியபடி உள்ளே ஓடினாள்.



13

''அ... அப்பா... நீங்க...'' என்றான் பிரகாஷ். அதிர்ச்சியில் அவன் பேச்சிழந்து விட்டான்.

செம்பட்டைத் தாடியைப் பிய்த்து விட்டுப் புன்னகைத்த ராஜசேகர், ''நான்தான் டான்கலிலியோ!'' என்றார்.

பிரகாஷைப் பெருமிதமுடன் பார்த்தார் ராஜசேகர். அவன் கையில் அவரைக் குறி பார்த்த துப்பாக்கி; தன் ஆட்களுடன் கட்டிப் புரண்டதில் ஆடையில் தூசு; நெற்றியில் நீலம் பாய்ந்த புடைப்பு; ஆங்காங்கே சிராய்ப்பு. முகத்தில் தாள முடியாத மகிழ்ச்சி பிரதிபலிக்க எழுந்து மகன் அருகே வந்தார். பிரகாஷ் விழித்தான்.

சிலை போல் நின்றிருந்த அவனை ஆரத் தழுவி விட்டு, ''நீ சாதிச்சுட்டே பிரகாஷ்! எஸ். யூ ஹாவ் டன் இட்! நீ தேறிட்டே. திறமைசாலின்னு நிரூபிச்சுட்டே. டான்கலிலியோவாக அனைத்துத் தகுதிகளும் உன்கிட்ட இருக்கு என்றார்.''

''என்னப்பா சொல்றீங்க?''

''விளக்கமாச் சொல்றேன்'' அவனை அங்கிருந்த சோபாவில் அருகே அமர்த்திக் கொண்டார்.

''சிந்துவுக்கு ஒன்றும் ஆகலையே?''

''நோ மை ஃபூல்! அவ மேல உள்ள உன் காதல்தான் என் திட்டம் நிறைவேற உதவிச்சு.''

''திட்டமா?''

''ஆமாம், பிரகாஷ்! உன்னை, டானாக விளங்கத் தகுதியுள்ளவனா மாற்ற நான் தீட்டிய திட்டம்!''

ராஜசேகர் பரவசமுடன் சில வினாடிகள் கண் மூடிவிட்டுத் திறந்தார். ''இது நாம பரம்பரையா செய்துக்கிட்டு வர்ற தொழில் பிரகாஷ்! அமெரிக்க மாஃபியா குடும்பங்கள் மாதிரி. இங்கே டான்கலிலியோ இஸ் ஸுப்ரீம்! கலிலியோ யார் என்பது உலகத்துக்குத் தெரியாமலே அதிரகசியமா இயங்கி வந்திருக்கோம். எல்லாம் நம்பிக்கையான ஆளுங்க. ஆனா உங்க அம்மாவுக்கு அரசல் புரசலா எப்படியோ ஏதோ தெரிஞ்சிருக்கும் போல. என் இன்ஃப்ளுயன்ஸ் உன் மேல படக்கூடாதுன்னு பிடிவாதமா உன்னை ஊட்டியில படிக்க வைச்சா. பொறுமையாக் காத்திருப்போம்னு முடிவு செஞ்சேன். உன் ஓவிய விருப்பத்துக்கு வளைஞ்சும் கொடுத்தேன்; பின்னால உன்னை வளைச்சுற முடியும்னு நம்பிக்கை இருந்தது. என் நம்பிக்கை பொய்யாகலே! பாரு, எத்தனை பேரை

அடிச்க நொறுக்கிட்டு, எத்தனை தடைகளைக் கடந்து டானுடைய குகைக்குள்ளேயே நுழைஞ்சுட்டே!'' பெருமிதத்தில் பரவசமானார் ராஜசேகர். தொடர்ந்தார் :

''உன் விஷயத்துல வழிவழியா வந்த டான் 'செயின்' அறுந்துருமோன்னு இடையிலே பயம் வந்துருச்சு மை சன். பிஸினஸுக்கே பிடி கொடுக்காத நீ, மத்த மத்த விஷயங்களுக்கு எங்கே ம சி ய ப் போறேன்னு கவலையாயிருச்சு. ஆனா உன் கோபத்தின் சக்தி எனக்குத் தெரியும்; லேசுல கிளம்பாது; கிளம்பினாத் தணியாது. இது நம் பரம்பரைக் குணம். உன் கோபம் கிளப்ப ஒரு வழி தேடினேன். கிடைச்சது.

''எந்த ஒரு மனுஷனும் தன் மனைவியைக் காணலைன்னா கொதிச்சுப் போயிருவான். அதுவும், சிந்துஜா மேல நீ அதீத அன்பு வெச்சிருந்தே...''

''சிந்து கடத்தல் 'நாடகம்' அரங்கேத்தினீங்களாக்கும்!'' என்றான் உணர்ச்சியற்ற குரலில்.

''எஸ் மை சன்!'' என்றார் மன்னிப்பு கோரும் குரலில். ''ஆனா ஒண்ணு. என் மருமக பேர்ல எனக்குப் பாசம் இல்லைன்னு மட்டும் நினைச்சுடாதேடா. ஒரு துரும்பு கூட அவ மேல படாம பாது காத்துக்கிட்டிருக்கேன்.''

அவன் முகத்தில் இறுக்கம் தளர்ந்ததைக் கவனித்து விட்டு மேலே தொடர்ந்தார் ராஜசேகர்.

''சிந்துவை நீ தேடிக் கண்டுபிடிக்க வேண்டிய நெருக்கடி நிலையை உருவாக்கினேன். அதன் மூலமா என்னுடைய இருட்டு உலகத்தை உனக்கு அறிமுகம் செய்யறது மட்டுமில்லே; அடுத்த டானாகப் பொறுப்பேற்க உனக்கு இது ஒரு கடும் பயிற்சியாகவும் அமையும்னு நினைச்சேன்.''

''ஐ. சி. சில சந்தேகங்கள் கேட்கலாமா?''

''கேளு பிரகாஷ்.'' அவர் முகத்தில் திருப்தியும் பெருமிதமும் பரவியிருந்தது.

''நீங்கதான் டான்கலிலியோ. ஓகே. அப்போ இந்த பிஸினஸ், தொழிற்சாலை விவகாரங்கள்...''

''அவ்வளவும் உண்மை. நான் ஒரு வி. ஐ. பி., பிஸினஸ் மேக்னேட், இதெல்லாம் டான்கலிலியோவுக்கு அத்யாவசியமான போர்வைகள். மேலும், டானாக நான் வெட்டுகிற பணத்தில் பெரும் பகுதியை வர்த்தகத்திற்குத் திசை திருப்பறேன். பிஸினஸ் எல்லையில்லாம கொழிச்சுக்கிட்டே போகுது. விளைவு - பணம்; மேலும் பணம். பவர்; மேலும் பவர்! டேய், அனுபவிச்சுப் பார்த்தாத்தான்டா இதன் அருமை தெரியும்! அனுபவிக்கவும் போறே!''

''டான் சரி. அதென்ன கலிலியோ?''

''பரம்பரைப் பெயர். சிம்பாலிக்கா வெச்சது பிரகாஷ். லியோன்னா சிங்கம்; ராஜா. கலின்னா கலியுகம். இந்தக் கலி காலத்துல ஆட்சி செய்யறது, ஆட்டுவிக்கிறது எல்லாம் என் மாதிரி டான்கள்தான்!''

''அதான் சிங்க இலச்சினையா?''

ஆமென்று தலையசைத்தார் - புன்னகையுடன்.

''என்னைக் கத்தியால குத்த முயற்சி செய்த விபரீதம் ஏன் டாட்?''

''நீ வேகமா விலகலைன்னா உன்னைக் குத்தியிருக்க மாட்டான்! நீ விலகினதால் வீசினான் - மரத்திற்குக் குறி பார்த்து!'' சிரித்தார். ''உனக்கு நல்ல ரிஃப்ளெக்ஸ் இருக்குன்னு ரிப்போர்ட் பண்ணினான் அவன்! கத்தி சம்பவம், அதற்கும் முன்னால் கார் பின் தொடர்ந்தது எல்லாமே நான் சிந்திச்சு உருவாக்கின சோதனைகள் பிரகாஷ். நீ பயப்படறியான்னு பார்த்தேன்; எப்படி சமாளிக்கிறேன்னு தெரிஞ்சுக்க விரும்பினேன்.''

''உங்க சிட்பண்டை நீங்களே கொள்ளை அடிச்சுக்கிட்டீங்களே... அது ஏன்?''

ராஜசேகர் கலகலத்தார் : ''அது உன் தாத்தா வழி முறை பிரகாஷ். நாமே டானுடைய விக்டிம் மாதிரி அப்பப்போ போலீஸ் கண்களுக்குக் 'காண்பிச்சுக்கிற' உத்தி வழக்கந்தான். மேலும், நம்ம பணம் கொள்ளை போயிருச்சுன்னதும் உசுப்பேறுவியோன்னு எதிர்பார்த்தும்தான் செய்தேன்.''

''ஒரு பக்கம் பிஸினஸ் பார்த்துக்கிட்டு, இன்னொரு பக்கம் துப்பாக்கி தூக்கிக்கிட்டு... இரண்டும் எப்படி முடியுது டாட்?''

''நான் 'களத்துல' எப்பவும் இறங்கறதில்லை மை சன்; அவசியமில்லை. 'ப்ராஜக்டு' தேர்ந்தெடுத்து, பலதையும் யோசித்து ஆழ்ந்து அலசித் திட்டம் வகுத்துக் கொடுப்பேன். துடிப்பா நிறைவேற்றித் தர நம்பிக்கையான ஆளுங்க வெச்சிருக்கேன். இங்கேயும் ஒரு சிஸ்டம் - ரிவார்டு, பனிஷ்மெண்ட், ப்ரமோஷன் எல்லாம் உண்டு. என்கிட்ட சோமையான்னு ஒருத்தன் இருக்கான். அவன்தான் என் 'ஹிட்' மேன்! இருபது வருஷமா என்னோட இருக்கான். அசகாய சூரன். எங்கப்பாகிட்டே வேலை பார்த்த 'தளபதியை' விட இவன் சூப்பர்.''

பத்மா ரவிசங்கர்

சற்று மௌனம் நிலவியது.

''இந்தத் தொழிலிலுள்ள சவால், சாகஸம், பணம், பவர், செஸ் காய் நகர்த்தும் சாதுர்யம் எல்லாமாகச் சேரும் போது அது சுவர்க்கம்! மை சன், உன்னையும் இதன் பரவசச் சுவை ஈர்த்திருக்கும்னு நம்பறேன். 'டான் பரம்பரை நான்'னு நினைச்சுக் கர்வப்படு!

''இப்படி நினைச்சுப் பாருங்க டாட். அவசரப்பட்டு யார்னு தெரியாம நான் உங்களைச் சுட்டிருக்கலாமில்லையா?''

''சந்தோஷமா ஏத்துக்கிட்டிருப்பேன் பிரகாஷ்! இந்தத் தொழிலில் சாவு சகஜம்; உயிருக்கு எப்போதும் ஆபத்துத்தான். எவனாலேயோ என் மரணம் நிகழறதுக்குப் பதிலா உன்னை ஒரு டானாக உருவாக்குகிற முயற்சியில் உன் கையால் சாகறது பெருமை மை சன்!''

''அப்பா!'' அலறினான்; நடுங்கினான்.



''அவரு ரொம்பப் பழங்காலப் பேர் வழின்னு நீ சொன்னது சரிதான்!''

''என்ன ஆச்சு?''

''லஞ்சத்தை ஒப்பனாத் தராம சுவர்ல வைச்ச டேபிளுக்கு அடில நீட்டறாரு!''

- கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

'' என் ப்ரிய மகனுக்குத் துணிச்சலும் தகுதியும் வந்திருக்குன்னு சந்தோஷத்துடன், அடுத்த டானாக ஆசை வாரிசை உருவாக்கிட்டேன்கிற திருப்தியுடன் கண்ணை மூடியிருப்பேன்.''

அந்தக் காட்சியை அவனால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை. நல்ல வேளை; அந்தப் பழி தனக்கு வராமல் தப்பித்தோமே என்று நினைத்து நிம்மதிப் பெருமூச்சு வெளிப்படுத்தினான்.

ராஜசேகர் தமது சட்டைக்குள் மறைந்திருந்த கழுத்துச் சங்கிலியை வெளியே இழுத்தார். சற்று நீளமான தங்கச் 'செயின்' அது; அதில் ஒரு சிங்கத் தலை லாக்கெட் தொங்கியது. அன்று வரை பிரகாஷ் பார்த்தே அறியாத அதை அவன் கழுத்தில் அணிவித்து விட்டுப் பரவசமாகப் பார்த்தார். பிரகாஷ் ஏதும் புரியாமல் விழித்தான்.

''பிரகாஷ், இதை உன் தாத்தா எனக்கு அணிவிச்ச போது எனக்கு இருபது வயசு தான். இது டான் கலிலியோவுக்கு உரிய செயின்.''

பிரகாஷ் இன்னமும் பிரமிப்பு விலகாமலிருந்தான். ஒருசில வினாடிகளில் ஒருவன் வாழ்க்கை எப்படி திசை திரும்பி விடுகிறது...!

''உனக்கு ஒரு முக்கிய பைல் காண்பிக்கணும்.''

ராஜசேகர் எழுந்து மேசையைச் சுற்றிக் கொண்டு போய்ச் சுழல் நாற்காலியில் அமர்ந்தார். குனிந்து மேசையின் இரண்டாம் இழுப்பறையைத் திறந்து ஒரு பைல் எடுத்தார்.

நிமிர்ந்தார்.

''இந்த ஃபைல்ல...'' என்று ஆரம்பித்த ராஜசேகரின் நெற்றிப் புருவ மத்தியில் திடீரென்று ஒரு இரத்தக் குமிழ் உற்பத்தியாக, துப்பாக்கி வெடித்த ஓசை கேட்டது!

பிரகாஷ் அதிர்ச்சியில் உறைந்து விட்டான். அப்பாவின் தலை சட்டென்று சரிய, மெல்லத் திகைப்பு நீங்கித் திரும்பினான்.

அறை வாசலில் விகாரமாக இளித்தபடி சோமையா! அவன் கையில் அழுக்குக் கறுப்பில் துப்பாக்கி.

''டாய்!'' என்று உரக்கக் கூவியபடி எழுந்திருக்க முயன்றான், பிரகாஷ்.

''அசையாதே பிரகாஷ்!'' என்று சொன்ன சோமையா முன்னால் துப்பாக்கி நீட்டியபடி நடந்து சற்றுத் தொலைவில் நின்று கொண்டான்.

''நான்தாம்பா சோமையா!'' என்றான் காஷுவலாக.

''அநியாயமா அவரைக் கொன்னுட்டியேடா பாவி! உன்னைப் பத்தி எவ்வளவு உயர்வாச் சொன்னார்... நீ ஒரு துரோகின்னு தெரியாம...''

''ஷட்டப்'' - மூர்க்கமாக உறுமினான் சோமையா. ''அவர் எனக்குச் செய்ததுக்குப் பேரு என்னவாம்... இருபது வருஷமா நாயா உழைச்சுப் படிப்படியா முன்னேறித்தான் இந்த இடம் வந்திருக்கேன். ஒரு டானுக்குத் தேவையான அத்தனைத் தகுதியும், திறமையும் என்கிட்ட இருக்கு. அடுத்து சாம்ராஜ்யத்தை எனக்குத் தருவார்னு நம்பியிருந்தேன். தூரிகையும் கையுமா எதிலேயும் பட்டுக் கொள்ளாம நீ இருந்தே. அதனால அடுத்த டான் நான்

தான்னு எவ்வளவு சந்தோஷமா, எதிர்பார்ப் போட இருந்தேன்...''

சோமையா உணர்ச்சிவசப்பட்டுப் பேசினாலும் அவன் துப்பாக்கி பிரகாஷை விட்டு இம்மியும் குறி விலகவில்லை.

''ஆனா பாஸ் குயுக்தியா செயல்பட்டுத் தன் வாரிசை இழுக்கத் திட்டமிட்டார். கொதிச்சுப் போயிட்டேன். பம்பாயிலே ஒரு டீல் முடிச்சுட்டுத் திரும்பி வந்ததும் விஷயம் தெரிஞ்சு உஷாராயிட்டேன். இந்த மாதிரி ஒரு க்ளைமாக்ஸை எதிர்பார்த்துப் பொறுமையாக் காத்துக்கிட்டிருந்தேன். இப்போ உன்னையும் தீர்த்துட்டா...'' வெறியுடன் சிரித்தான். ''இனி நான்தான் டான்! டான் சோமையா தி கிரேட்! கேட்கவே கிக்கா இருக்குல்ல... ஆல்ரைட். சாகத் தயாராகு மேன்!''

தனக்கும் அவனுக்கும் உள்ள இடைவெளி பத்தடியாவது இருக்கும் என்று கணக்கிட்டான் பிரகாஷ். பாய்ந்து தாக்க சத்தியமாக வாய்ப்பில்லை. மேலும், இவன் 'தேர்ந்தவன்' என்பது துப்பாக்கி பிடித்திருக்கும் நேர்த்தியிலேயே தெரிந்தது. 'அங்கே சுழல் நாற்காலியில் அகால மரணமடைந்திருக்கும் அப்பா. அழக்கூட அவகாசம் இல்லாமல், சாவின் விளிம்பில் நான். என்ன ஒரு மோசமான சூழ்நிலை!' மூளை மரத்து விட்டாற்போலிருந்தது.

சோமையாவின் முகபாவத்திலிருந்தே அவன் தன்னைச் சுடத் தயாராகி விட்டான் என்பது தெரிந்தது. பிரகாஷ் முகம் இறுகிற்று. பயம் தெரியவில்லை. மரணம் எப்படி இருக்கும்? ஒரு வினாடி உச்சபட்ச வலியா? கண்களை இறுக மூடிக் கொள்ளலாமா...

கோலி சோடா திறந்தது போல் 'டுயிக்' என்று துப்பாக்கி வெடிக்கும் ஒலி கேட்டது. தொடர்ந்து 'ஆ' என்ற அலறல். ஏன் எனக்கு வலிக்கவில்லை? நான் இன்னும் சாகவில்லையா... பிரகாஷ் திகைத்தான்.

எதிரே இரத்தம் ஊறும் தன் தோளைப் பற்றியபடி சோமையா. அவன் பின்னே... துப்பாக்கி பிடித்தபடி...

ஏசிபி தேவதேவன்!

''நான்தான் சுட்டேன் பிரகாஷ்! தேங்க் காட். சரியான சமயத்துல நுழைஞ்சிருக்கேன். இந் நேரம் இந்த ராஸ்கல் உன்னைத் தீர்த்துருப்பான்...!''

''நீங்க... உங்களுக்கு ஹார்ட் அட்டாக் குன்னு...'' பிரகாஷ் திணறினான்.

''எனக்கும் நடிக்கத் தெரியும் பிரகாஷ்!'' ஏசிபி சிரித்தார்.

அறையினுள் பிரவேசித்த இரு போலீசார் தோளில் சுடப்பட்டிருந்த சோமையாவை விலங்கிட்டு அழைத்துச் செல்ல முற்பட, ''கிவ் ஹிம் சம் ஃபர்ஸ்ட் எய்ட்'' என்ற ஏசிபி திரும்பி, சேரில் சரிந்திருந்த ராஜசேகரைக் கண்டதும் துணுக்குற்று, ''இவர்.. இவர்...''

''எஸ்! ஹி ஈஸ் டெட்'' என்றான் பிரகாஷ் வறண்ட குரலில்.

''வெரி சாரி பிரகாஷ்!''

பிரகாஷ் அருகே சென்று இறந்து கிடந்த அப்பாவை இமைக்காமல் பார்த்தான். சற்று நேரம் முன் வரை துடிப்புடன் சிரித்துப் பாசமுடன் பார்த்து விட்டு... மெல்லக் கைநீட்டி அவர் தலையைத் தடவிக் கொடுத்தான். துளிர்த்த ஒரு சொட்டுக் கண்ணீரைச் சுண்டி விட்டு மெல்லத் திரும்பினான்.

''எப்படி இங்கேன்னு கண்டுபிடிச்சீங்க?''

''மேக் ஏ கெஸ்.''

''அச்சரபாக்கம் போலீஸ் ஸ்டேஷன் லேருந்து என்னைப் பின்பற்றின கார் நம்பர் வச்சு...''

''ராங். அது ஒரு போலி நம்பர் பிளேட்.''

''பின்னே?''

''சொல்றேன். டான் கலிலியோ நிகழ்த்திய குற்றங்களைப் பட்டியலிட்டுப் பார்த்ததுல கிட்நாப் கேஸ் எதுவுமில்லே. அதனாலேயே சந்தேகம் தட்டியது. உண்மையில் இது டான் வேலையா இருந்தா அனுபவக்

---



''வர வர எதெதுக்குப் பட்டிமன்றம் வைக்கிறதுன்னு விவஸ்தையே இல்லாம போயிடுச்சு!''

''ஏன்? என்னாச்சு!''

''மாவட்டத்திலேயே அதிக மாமூல் வாங்குவது... காவல் துறையா, வருவாய்த் துறையா'ன்னு பட்டிமன்றம் வச்சிருக்காங்களே! ''

- சுவீட் ரவி

''ஜாதகம் பொருந்தித்தான் இருக்கு தரகரே. ஆனா, வழக்கமா இன்ஜினியர் மாப்பிள்ளைக்குக் கேட்கிற வரதட்சணையை விட இவருக்கு அதிகமாக் கேட்கிறாங்களே!''

''அதுக்கென்ன பண்றது, இவர் செல்ஃப் பைனான்ஸ் காலேஜில் படிச்சவராச்சுங்களே!''

- ஞா. ஞானமுத்து



குறைவால் தப்பு செய்வான்னு எதிர்பார்த்தோம். ஆனா கடத்தினது டான் என்பதாலே உஷாராகவும் செயல்பட்டோம். கொஞ்சம் முட்டாள்தனமாகவும், அஜாக்கிரதையாகவும் வேணும்னே நடந்துக்கிறதுன்னு முடிவு செய்தோம். அதே சமயம் எங்க பாவ்லா காரணமா டானுக்குச் சந்தேகமும் வரக் கூடாது. டான் ரிலாக்ஸ் ஆகணும்னுதான் எனக்கு அட்டாக்குன்னு ஆஸ்பத்திரியில சுருண்டுக்கிட்டேன்!''

புன்னகை சிந்திவிட்டுத் தொடர்ந்தார் :

''நீங்க அன்னிக்கு ராத்திரி யாருக்கும் தெரியாம இளம்பறதா நினைச்சுக்கிட்டுப் புறப்பட்டீங்க. நாங்களும் அதுல ஒத்துழைச்சோம். உங்களைப் போலீஸ் பின் பற்றக் கூடாது; வழியில எந்த போலீஸ் ஸ்டேஷனுக்கும் தகவல் சொல்லக் கூடாதுன்னு முடிவு செய்தோம். வேறொரு வழிமுறை யோசிச்சேன். ராத்திரி மலை இறக்கத்துல சாலையின் குறுக்கே ஒரு வண்டியையும், முண்டாகப் பெரியவரையும் பார்த்திருப்பீங்களே...''

வாய் பிளந்தான் பிரகாஷ்.

''அவர் ஒரு போலீஸ் அதிகாரி! குடிசைக்குள்ளே தனியான அலைவரிசைல வயர்லஸ் டிரான்ஸ்மிட்டர் வெச்சுக்கிட்டு நாலு நாளா அங்கே காத்துக்கிட்டிருந்தார். அப்புறம் மதுரை வீதியில விலாசம் விசாரிச்ச காது கேளாத கிராமத்தானும் ஒரு சி.ஐ.டி. ஆபீஸர்தான். இந்த மாதிரி வெவ்வேறு மாறு வேஷங்களிலே தொலைவிலேயிருந்துகிட்டே உங்க மேல கண் வைச்சு இங்கே டிரேஸ் செய்துட்டோம்!''

தேவதேவனின் திறமை அவனை வியக்க வைத்தது.

''ரெண்டு நாளாக் கண்காணிச்சுக் காத்திருந்தோம். மாளிகைக்குள்ளே நீங்களும், சிந்துஜாவும். ஷூட் அவுட்டுன்னு வந்தாப் பிரச்னை. கவலையாயிடுச்சு. வேற வழி இல்லைன்னு ஸ்டார்ம் பண்ணச் சொல்லி டிஜிபி உத்தரவிட்டதும் வளைச்சுக்கிட்டோம். டான் சாம்ராஜ்யம் ஓவராயிடுச்சு!'' என்றார். நிம்மதி பரவியது அவர் முகத்தில்.

''எல்லாரையும் முட்டாளாடிச்சுட்டீங்க ஏசிபி!''

''நான் சாதாரணம் பிரகாஷ். ஸூப்பர் ஸ்டார் உங்க அப்பாதான்! எத்தனை காலமா போலீஸ் டிபார்ட்மெண்ட் அத்தனை பேர் கண்ணிலும் மண் தூவியிருக்கார்!''

அப்போது துப்பாக்கி வெடித்த ஓசை கேட்க, பிரகாஷ் திகிலுடன் நிமிர்ந்தான்.

''பயப்படாதீங்க. சிந்துஜா அறைப் பூட்டை உடைக்கிறாங்க!'' என்று சிரித்தார் தேவதேவன்.

சில நாட்கள் சென்று ஒரு பொன் மாலைப் பொழுது. சிந்துஜா அருகே வந்தாள். பிரகாஷ் ஒரு தொழிலக ஃபைலிலிருந்து நிமிர்ந்தான். அவளிடத்தில் ஒரு அபூர்வ மலர்ச்சி. கன்னத்தோடு கன்னம் உரசினாள். மணத்தை உறிஞ்சினான்.

''உங்களுக்கு ஒரு இனிய அதிர்ச்சி டியர்.''

''என்ன சிந்து சொல்றே?''

''நமக்கு ஒரு வாரிசு உருவாகுது!''

''வ்வாட்!'' - கட்டி அணைத்தான்.

''ரெண்டு மாசம்!'' என்றாள் வெட்கமுடன்.

வெகுநேரம் கழித்து மெல்ல அவளை விடுவித்த பிரகாஷ், அன்புக் கிறக்கத்தில் அவள் கண்கள் மயங்கியிருக்க, மெல்ல வேறுபுறம் திரும்பினான். தன் கழுத்திலிருந்த பரம்பரைச் சிங்க இலச்சினைச் செயினை, வாரிசை எண்ணியபடியே தயக்கத்துடன் தடவிப் பார்த்தான் - இரகசியமாக.

- முற்றும் -



# வீட்டைக் கட்டிப்பார்; கறையானை ஒழித்துப்பார்!

வீட்டுக்கடவை அடைக்கு முன்னரே, வீட்டைக் கறையான் அழித்துவிடும் ஆபத்து உண்டு! அதனால்தான் சமீப கால மாகப் பெரிய அடுக்குமாடிக் கட்ட டங்கள் கட்டப்படும் மனைகளில் 'Pest Control by...' என்று அறிவிப்புக்களைப் பார்க்க முடி கிறது. கட்டடங்கள் கட்டப்படும் முன்னரே அவற்றைப் பூச்சிப் பொட்டுகள் அணுகாமல் காக்க என்ன செய்கிறார்கள்? National Pest Control என்ற நிறுவனத்தை நடத்தி வரும் தனம் கணேஷ்ராஜுவைச் சந்தித்துக் கேட்டோம் :

''தனி வீடோ, அடுக்கு மாடிக் கட்ட டமோ கட்டும்போது ஐந்து நிலைகளில் மருந்து அடித்துத் தருகிறோம். அஸ்திவாரம் தோண்டும் போதே ஓரடி இடைவெளிவிட்டு ஒரு முறை; ஜல்லி, மணல் போட்டுத் தரை தயாராகும் நிலையில் ஒரு முறை; கட்டு வேலைக்குப் பிறகு சுற்றுச் சுவர் ஓரமாக ஒரு முறை; மர வேலைகள் துவங்கும்போது எல்லா மரத் துண்டுகளுக்கும் ஒரு முறை; கட்டடம் கட்டி முடிந்த பிறகு முழுமையாக ஒரு முறை... இவ்வாறு மருந்து அடித்தால் பத்து முதல் பதினைந்து வருடங்களுக்குக் கறையான் அரிப்பிலிருந்து உத்தரவாதம் அளிக்க முடியும்...'' என்றார் தனம் கணேஷ்ராஜு.

வீடு கட்டும் நிலையிலேயே இந்த 'ட்ரீட்மெண்ட்' அளித்து விடுவதில் அனுகூலங்கள் அதிகம். செலவோடு செலவாகப் போய்விடும். குடியிருக்கும் வீட்டில் சாமான்களை நகர்த்தி ஒதுக்கி அமர்க்களம் செய்யும் தொல்லையும், மருந்து நெடியைச் சகித்துக் கொள்ளும் அவஸ்தையும் இராது. வருமுன் காத்துவிடுவதால் ஆயிரக்கணக்கில் செலவு செய்து, செல்லரித்த மரப் பாகங்களை மாற்ற வேண்டிய அவசியம் ஏற்படாது.

பெஸ்ட் கன்ட்ரோல் நிறுவனங்கள் எத்தகைய பணிகள் செய்கின்றன...? விளக்குகிறார் National Pest Control நிறுவன மானேஜர் ஜெ. சந்திரசேகரன் :

''ஏற்கெனவே கட்டப்பட்ட வீட்டில் கறையான் பிடித்திருந்தால் வீடு முழுவதும் தரையை ஒட்டிய சுவர்ப் பகுதியில், ஓர் அடி இடைவெளியில் துளைகள் போட்டு மருந்தை 'இன்ஜெக்ட்' செய்து துளையை அடைப்போம். வீடுகளில் எலி மருந்து அடிப்பது அவ்வளவாகப் பாதுகாப்பானது அல்ல. எலிகள் வீட்டுக்குள்ளேயே செத்துப் போய்க் கிருமிகளைப் பரப்பும்; வீட்டில் வாழும் பூனை, நாய் போன்றவை இந்த எலிகளைக் கவ்வினால் நிச்சயம் இறந்துவிடும்!

''கொசுத் தொல்லை தீரவும், தோட்டத்துச் செடிகளில் பூச்சி பிடிக்காமல் இருக்கவும் மருந்து அடிக்கிறோம்.'' என்று தெரிவிக்கும் இவர், இது குறித்த விழிப்புணர்ச்சி இன்னும் போதிய அளவுக்கு ஏற்படவில்லை என்றே கருதுகிறார்.

பூச்சி ஒழிப்பு வசதி பற்றிய விழிப்புணர்வோடு, அதற்குப் பயன்படுத்தப்படும் மருந்துகளினால் விளையக்கூடிய ஆபத்துக்கள் குறித்தும் விழிப்புணர்வு அவசியம்.

பெஸ்ட் கன்ட்ரோல்காரர்கள் மருந்து அடிக்கும் வீட்டில், டி.பி., ஆஸ்துமா நோயாளிகள் இருக்கக் கூடாது. மருந்தடிக்கப்பட்டு பத்து நாட்கள் வரை கைக் குழந்தைகள் அவ்வீட்டில் இருக்கக் கூடாது. துணி, உணவுப் பொருட்கள், காகிதம் போன்றவை உள்ள இடத்தில் மருந்து அடிக்கக் கூடாது. மற்றபடி, சராசரி நபர்களுக்கு இதனால் பாதிப்பு எதுவும் இருக்காது.

- பானுமதி இராமச்சந்திரன்

படம் : யோகா

# பிரகாசமான வருங்காலத்துக்கு சிறப்பான ஆரம்ப விழா.

## கருத்துக்கினிய போட்டிகள்! மனதுக்கினிய பரிசுகள்!

எங்கே திரும்பினாலும் ஸ்ரீராம் சிட்ஸ் பற்றியே பேச்சு. 'எதிர்காலம் எப்படி இருக்கும்?' என்று எங்கள் 4,00,000 சந்தாதாரர்களில் எவரிடம் வேண்டுமானாலும் கேட்டுப்பாருங்கள். 'பத்திரமாகவும் பிரகாசமாகவும் இருக்கும்' என்று நம்பிக்கையோடு நறுக்குத் தெறித்தாற்போலப் பதில் சொல்வார்கள். காரணம், உயரும் விலைவாசி இருந்த போதிலும் ஸ்ரீராம் சிட்ஸின் துணையுடன் எத்தனையோ சூழ்நிலைகளைச் சமாளித்துத் தங்கள் கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றியவர்கள் அவர்கள்.

திருமணம், மேற்படிப்பு, சொந்தவீடு, சொந்த வாகனம்... இப்படி வாழ்க்கையின் எல்லா நல்ல அம்சங்களையுமே அவர்களால் அடைய முடிந்திருக்கிறது.

நீங்களும் அவற்றை அடைய முடியும். ஸ்ரீராம் சிட்ஸில் சேருவது அதற்குச் சிறப்பான ஆரம்பமாக அமையும். அது மட்டுமல்ல. நீங்கள் சிட்டுச் சேருவதை மறக்க முடியாத நிகழ்ச்சியாக்க அற்புதமான பரிசுகளும் அளிக்கப்படுகின்றன. ஒவ்வொரு நாளும் போட்டிகள். ஒவ்வொரு நாளும் பரிசுகள். இந்த 10 நாட்களில் நீங்கள் வெல்லுவதற்காக 2100 பரிசுகள்.

வருங்காலத்தில் நீங்கள் பெறக்கூடிய எல்லா வளங்களையும் எண்ணிப் பாருங்கள். அவற்றை அடைவதற்குத் தயாராகுங்கள். ஸ்ரீராம் சிட்ஸுக்கு வாருங்கள்.

ரூ. 75,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு பொதுத்துறை, தனியார் துறை, அரசு அல்லது அங்கீகரிக்கப்பட்டுள்ள நிறுவனங்களில் பணியாற்றும் 3 பேர் உத்திரவாதம் அளித்தாலே போதும். வேலையிலிருக்கும் பெண் சந்தாதாரர் ரூ.15,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுக்கும் போது, அவருடைய கணவருடைய உத்திரவாதமே போதுமானது.

| சீட்டு மதிப்பு | சந்தாதாரர் பரிசு |
|---|---|
| 1. 200 x 40 = 8,000 | ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ப்ரேக்ஃபாஸ்ட் செட் |
| 2. 250 x 40 = 10,000 | 4 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 3. 500 x 30 = 15,000 | ஹால்மார்க் குக் அண்ட் சர்வ் பான் |
| 4. 625 x 40 = 25,000 | 'விட்வோ' குடம் |
| 5. 500 x 60 = 30,000 | மில்டன் ஸ்லிக் தெர்மோ லஞ்ச் பாக்ஸ் |
| 6. 1,000 x 50 = 50,000 | காளி காப்பர் பாட்டம் கிரிடில் |
| 7. 1,250 x 60 = 75,000 | காளி காப்பர் பாட்டம் டோப், மூடியுடன் |
| 8. 1,000 x 100 / 2,500 x 40 = 1,00,000 | ஹால்மார்க் ப்ளூரோதெர்ம் குக்வேர் |
| 9. 4,000 x 50 = 2,00,000 | 25 கிராம் வெள்ளிக் காசு (இரண்டு) |
| 10. 10,000 x 30 = 3,00,000 | 2 கிராம் தங்கப் பதக்கம் |
| 11. 20,000 x 50 = 10,00,000 | 8 கிராம் தங்கப் பதக்கம் |

நாமுலவுக்கட்டணம் தனி

| அறிமுகப்படுத்துவோர் பரிசு |
|---|
| 1. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஐஸ்கிரீம் கப்புகள், ஸ்பூன்களுடன் (இரண்டு). |
| 2. மில்டன் சூப்பர் கப்புகள் |
| 3. காளி ஸ்வீட் டிரே (இரண்டு) |
| 4. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீஸ் பௌல் |
| 5. மில்டன் ஒனிக்ஸ் டம்ப் ஜக் |
| 6. காளி ஸில்வர் வாடில் |
| 7. காளி மில்க் ஜாடி |
| 8. டிப்பமட் மகாராஜா செட் |
| 9. 20 கிராம் வெள்ளிக் காசு |
| 10. 20 கிராம் வெள்ளிக் காசு |
| 11. ஈகிள் போர்ஜெலீனா பிளாஸ்க் |

ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 30.4.92

போட்டிகளும் பரிசுகளும் இணைந்து வழங்குவோர்: பூரியைட் ஜாடிகள் & பாட்டில்கள்




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: 'சுப்பிரமணியம் பில்டிங்', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002. போன்: 474451/475536/470400/473932.

*ஸ்ரீராம் சிட்ஸ் — பலருக்கும் பல வகையிலும் பலன்*



# ஸ்ரீதேவிக்குக் காங்கிரஸ் கொ.ப.செ. பதவியாமே...?

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

? "நிதானமும் பக்குவமும் வேண்டும்; அதெல்லாம் ஜெயலலிதாவிடம் இடையாது என்பதை எதிர்காலம் நிரூபிக்கும்" என்று இன்றைய அ.தி.மு.க. மந்திரி ஒருவர் மூன்று ஆண்டுகளுக்கு முன் கல்கிக்குப் பேட்டி தந்தாரே, அவர் யார்?

! எதற்கு ஸாரி, பாவம், அவர்தான் ஏற்கெனவே சாண் ஏறி முழம் சறுக்கிக் கொண்டிருக்கிறாரே!

● என். வித்யா நந்தகுமார், ஏரல்.

? ஆண்டவன் யாருக்குக் கூலி கொடுக்கப் போகிறான்?

! "ஆண்டவன் கவனித்துக் கொள்வான்; கூலி கொடுப்பான்" என்றெல்லாம் சொல்லும் போது, ஆண்டவன் நிலையில் நம்மை நிறுத்திக் கொண்டு தீர்ப்பு வழங்குகிறோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அது மமதை. எதிரிக்கும் ஆண்டவன் அருளை வேண்டுவதே பண்பாடு.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

? ஏப்ரல் முதல் தேதி மட்டும்தான் ஏமாறுகிறோமா?

! இந்தியாவில் ஒவ்வொரு நாளும் மக்களுக்கு ஏப்ரல் முதல் தேதிதான்!

● சி. காந்திராஜ், செம்போடை.

? "கள்ளச் சாராயம் சாப்பிட்டு இறந்தவர்களுக்கு அரசு எவ்வித உதவியும் செய்யாது" என ஜெயலலிதா அறிவித்துள்ளாரே, இது பாராட்டத்தக்கதுதானே?

! ஸாரி, நான் அவ்வாறு கருதவில்லை. கள்ளச் சாராயம் இல்லாமல் கவனித்துக் கொள்ள வேண்டியது அரசின் பொறுப்பு. ஆகலால் இறந்தவர் குடும்பங்களுக்கு உதவ வேண்டிய கடமையும் நிச்சயமாக அரசுக்கு உண்டு.

● என். சம்பத், தூத்துக்குடி.

? விடுதலைப் புலிகளை ஆதரிப்பதில் பா.ம.க. முதலிடம் பெற்று விடுமா?

! முதல்வரின் அழுத்தமான சட்டசபை கேள்விக்குப் பண்ருட்டியாரின் நழுவலான பதிலைப் பார்க்கும் போது, எதிர்நோக்கும் புலிகள் தடைச் சட்டம் காரணமாகப் பா. ம. க. தனது நிலையிலிருந்தும் நழுவும் என்றே தோன்றுகிறது.

● டி. சந்திரன், ஈரோடு.

? பொறுமை, சகிப்புத் தன்மை, பொதுநல எண்ணம், ஆடம்பரமின்மை, அகந்தை இல்லாமை ஆகிய குணங்கள் முதல்வராயிருப்பவருக்குத் தேவையா?

! தேவை என்று கருதப்பட்ட கால கட்டம் ஒன்று இருந்தது.

● ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

? "பிரபாகரனைப் பிடிக்கும் பொறுப்பை என்னிடம் விடுங்கள், நான் பிடித்துத் தருகிறேன்" என்று சு. சுவாமி கூறியுள்ளாரே?

! அரசியல் ஜோக் அடிக்கும் பொறுப்பை அவரிடம் ஏற்கெனவே விட்டாயிற்று. அதனால்தான் அப்படிச் சொல்கிறார்.

● கோ. குப்புசாமி, கொங்கணாபுரம்.

? கச்சத் தீவு மீட்கப்பட்டு விடுமா?

! அது விட்டுக் கொடுக்கப்பட்டது மாபெரும் தவறு எனில், மீட்கப்படுவது இமாலயத் தவறாகி விடுமே!

● அரூர் ரவிச்சந்திரன், தர்மபுரி.

? நடிகை ஸ்ரீதேவிக்குக் காங்கிரஸ் கொள்கை பரப்புச் செயலாளர் பதவியாமே...?

! யார் கண்டது? காங்கிரஸ் அடுத்த பிரதமரைத் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கிறதோ, என்ன கஷ்டமோ!

● பி. ஜெயப்பிரகாஷ், நவமலை.

? பச்சை குத்துவதை எதிர்த்து எம். ஜி. ஆர். ஆட்சியில் வெளியேறிய தற்போதைய அமைச்சர்கள், இன்று பச்சை குத்திக் கொள்வதற்கு என்ன சமாதானம் சொல்கிறார்கள்?

! பச்சை குத்திக் கொள்ள வற்புறுத்தப்படுவதற்கும் விரும்பி பச்சை குத்திக் கொள்வதற்கும் வித்தியாசமிருப்பதாகத் தெரிவிக்கிறார்கள். பச்சையான சந்தர்ப்ப வாதம்!

● கே. எம். செல்வராஜு, கரடிப்பட்டி.

? நோயாளிகளைப் பார்க்க வரும்

பார்வையாளரிடம் கட்டணம் வசூலிக்க இருப்பது பற்றி?

! எல்லா அரசு மருத்துவமனைகளிலும் இப்போதே அது நடந்து கொண்டுதான் இருக்கிறது. இந்த அநிலையை நீக்குவதற்குப் பதில் இனி நோயாளிகளைப் பார்க்க வருவோர் இரட்டை அபராதம் செலுத்த வழிவகுக்கப் போகிறார்கள்!

● ஏ. எஸ். மாரியப்பா, புதுகை. ❑

? ஆட்சியில் இருக்கும் போது அரசு நிலத்தை வாங்குவது குற்றமா? அப்படியானால் பதிவுச் சலுகை இன்னும் குற்றம் தானே?

! 'பத்திரம் இன்னும் பதிவாகவில்லை; எனவே பதிவுச் சலுகை என்ற பிரச்னை எழவில்லை' என்று எஸ். டி. எஸ். கூறியுள்ளார். 'தனிநபர் என்ற முறையில் முதல்வர் வாங்கவில்லை. முதல்வர் சம்பந்தப்பட்டுள்ள ஒரு நிறுவனம்தான் வாங்குகிறது' என்று ஒரு விளக்கம் தரப்படவும் கூடும். இவையெல்லாம் சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து புறப்படும் சமாச்சாரம். எனவேதான் தார்மீக அணுகுமுறை அவசியமாகிறது. முதல்வர் பெருந்தன்மையுடன் இந்த இடலை விட்டுக் கொடுத்து மீண்டு வருவதே புத்திசாலித்தனமாகும். அரசு நிலம் அரசிடமே இருக்கட்டும். அதற்கு நல்ல உபயோகம் எதிர்காலத்தில் தோன்றக்கூடும்.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

? நீங்கள் ஒரு நடுநிலையாளராக இருப்பதால் 'மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் அடி' என்ற கதையாக ஆளும் கட்சி, எதிர்க்கட்சி ஆகிய இரு தரப்பினரிடமும் வசை வாங்கிக் கட்டிக் கொள்கிறீர்களே; உங்கள் மனம் நோகவில்லையா?

! இல்லை. வசை பாடுவதற்குரிய காரியத்தை நான் செய்திருந்தால் நிச்சயம் வசை என்னைப் பாதிக்கும். அவ்வாறு இல்லாத போது நான் ஏன் மனம் நோக வேண்டும்? அன்பு காரணமாகவே பிரச்னைகளை அலசுகிறேனேயன்றி காழ்ப்புணர்ச்சியுடன் நான் எதையும் எழுதுவதில்லை.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஏ. எஸ். மாரியப்பா,
2581, பல்லவன்குளம் வடிமதகு சந்து,
புதுக்கோட்டை - 622 001.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? தனது காருக்கு வழி விடாமல் சென்ற காரிலிருந்தவர்களைக் கடச் சொல்லி கறுப்புப் பூனைப் படைக்கு உத்தரவிட்டதாகத் தலைமைத் தேர்தல் கமிஷனர் டி. என். சேஷன் மீதான குற்றச்சாட்டுக்கள் பற்றி?

! குற்றச்சாட்டு உண்மையெனில் தேர்தல் சமயத்தில் அவர் செய்ததாகக் கருதப்படும் அதிகார துஷ்பிரயோகங்களை விடவும் மிகக் கொடுமையான நடத்தை இது. இது வரை அவரிடமிருந்து இதற்குப் பதில் வந்ததாகவும் தெரியவில்லை. சட்டுப்புட்டென்று அவர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றி வைக்க முயற்சிப்பது நல்லது. அரசும் தேர்தல் கமிஷனிடம் எதிர்க்கட்சிகளுக்கு நம்பிக்கை இல்லை என்பதை உணர்ந்து உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்.

● மஸ்கெலியா இலங்கேஸ்வரன், வேலூர்.

? உலகக் கோப்பை கிரிக்கெட்டில் பாகிஸ்தானின் அதிர்ஷ்டம் எப்படி?

! அரை இறுதியில் இங்கிலாந்துக்கு அடித்த அதிர்ஷ்டத்தை விட அதிகமாக இருக்க முடியாது!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? நடந்து கொண்டிருக்கும் தமிழக சட்டமன்றக் கூட்டம் பற்றி...?

! காரம் இருந்தாலும் சாரம் இல்லையே!

● எல். ஆர். கண்ணன், சென்னை.

? பரவாயில்லையே, சத்யஜித்ரே ஆஸ்கார் அவார்டைப் பெற்றுக் கொண்டு விட்டது சாதனைதானே?

! அதைவிடப் பெரிய சாதனை நமது பாரத அரசு இடீரென்று விழித்துக் கொண்டு, உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் அவர் மீது அவசரம் அவசரமாக பாரத ரத்னாவையும் திணித்திருப்பதுதான்!

☛ ஆஸ்கார் - பாரத ரத்னா





☛ புதிய குற்றச்சாட்டு

☛ நழுவலான பதில்



☛ அழுத்தமான கேள்வி



☛ ஜோக் பொறுப்பு



# 'காவிரிப் பிரச்னை தீர்ந்தாலும் காங்கிரஸ் பிரச்னை மாறாது!'

◆ காவிரிப் பிரச்னையே தீர்ந்தால் கூட நம் காங்கிரஸ் கட்சி கோஷ்டிகள் இணையாது!
விசலூர், ஜி. ஜி. கிருஷ்ணன்.

◆ இவ்வளவு கோஷ்டிப் பூசல்கள் இருந்து வருவதால்தான் 'காங்கிரஸ்' என்ற ஒரு கட்சி தமிழகத்தில் இருந்தது, இருந்து வருவது பலருக்குத் தெரிகிறது!
சத்திரம் கருப்பூர், மு. அய்யூப்கான்.

◆ ஆயிரம் அர்த்தங்களை அப்பட்டமாகச் சொன்ன அட்டைப் படம் அருமை!
மேட்டூர் அணை, ஆர். கருணாகரன்.

◆ ஒரு கட்சியின் உட்பூசலுக்குக் 'கல்கி' இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்க வேண்டுமா என்று சிலர் நினைக்கலாம். ஆனால் பாரம்பரியம் மிக்க ஒரு தேசியக் கட்சி, தமிழகத்தில் கோஷ்டிப் பூசலில் சிக்கிச் சீரழிகிறதே என்ற ஆதங்கம் 'கல்கி'யின் கட்டுரைகளில் வெளிப்படுவதை நன்கு உணர முடிகிறது. அக்கட்சியின் அனுதாபி என்ற வகையில் எனது மனமார்ந்த நன்றி!
கும்பகோணம், கே. பட்டு.

◆ 'தப்பிப் பிழைத்த அரசு' தலையங்கம் படித்தேன். தப்பிப் பிழைத்தது அரசு மட்டுமல்ல நாமும்தான் என்று அது உணர்த்தியது.
மொரட்டுப்பாளையம், கே. கஸ்தூரி.

◆ மத்தியில் உள்ள இ. காங்கிரஸைக் கவிழ்க்க எதிர்க்கட்சிகள் முயற்சி செய்யாமைக்குக் காரணம் பணப் பற்றாக்குறை மட்டுமல்ல. அக் கட்சிகளுக்குத் தற்போது இடை த் தேர்தலில் வெற்றி பெற மக்களிடம் செல்வாக்கு இல்லை. இடைத் தேர்தல் நடத்தால் காங்கிரஸ்தான் இன்று பூரண மெஜாரிட்டியுடன் வெற்றி பெறும். இதை எதிர்க் கட்சிகள் உணர்ந்தே இருக்கின்றன.
தென்பாதி, ஆர். வஸந்தராஜ்.

◆ கனடாவில் வசிக்கும் சென்னைவாசி சாஸ்திரி நம்மை அசத்துகிறார். பிறந்த மண்ணுக்குப் பெருமைசேர்க்கும் தாபத்தில் பெரு முயற்சி எடுத்துள்ள அவரது தொழில் நுட்ப அறிவைப் பயன்படுத்திக் கொள்ள அரசு பொறுப்பில் இருக்கும் நம்மவர்கள் முயல வேண்டும்...! இப்போதைய அரசின் தொழிற் கொள்கை அதற்குச் சாதகமாக உள்ளது!
ஈரோடு, சி. நாச்சிமுத்து.

## வட்டமேஜை

◆ கருணாநிதியை மட்டம் தட்ட "ஜெ" மேற்கொண்ட உபாயம் (கார்ட்டூன்) மிக, மிக மட்டரகமானது! மு. க. முத்துவை விட வசதி குறைந்த தொண்டர்கள் அ. தி. மு. க. வில் நிறைய பேர் இருக்கிறார்கள் என்பதைப் புரட்சித் தலைவி உணராதிருப்பது துரதிர்ஷ்டவசமானதே!
கொளவட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

◆ நளினி சாஸ்திரியின் "தேடல்" - பொன் விழா போட்டிக் கவிதை வெகு சுவாரஸ்யமான, புதிய பாணி, புதுக்கவிதை. நான் உன் சேவகன், காதலி, தாய், சீடன், சற்குரு என்று பறைசாற்றி' விட்டுக் கடைசியில் கம்ப்யூட்டர் மனிதனுக்கு யமன் என்ற திடீர்த் திருப்பம் வெகு அலாதி! ஒரே ஒரு திருத்தம். 113-ல் எட்டாவது வரியில் "ICMB -க்கள் ஸ்கட்கள்" என்பது "ICBM -கள் ஸ்கட்கள்" என்றிருக்க வேண்டும்.

(ICBM : INTER - CONTINENTAL BALLISTIC MISSILE) அதாவது கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஏவுகணை.
சென்னை - 88, கபில. வேங்கடேசன்.

◆ "பொற்கிழி" சிறுகதை ஒரு சவுக்கடி. ஆனால் நம் அரசியல்வாதிகளுக்கு எப்படிச் சொன்னாலும் ஏறாது. ஒரு அற்புதமான கருத்தை வீணடித்தாற்போல் மனம் நொந்தது.
தஞ்சாவூர் - 4, கே. காமாக்ஷி.

◆ மனோகர் போன்ற சபல புத்தியுடையோருக்குச் சவுக்கடியாக அமைந்தது சி. எஸ். சித்ராவின் "ஜோடிப் பொருத்தம்" சிறுகதை.
கடையல், அ. செபாஸ்டின்.

◆ வியாபார மோகத்தில் வீழ்ந்து விடாமல் கண்ணியமான முறையில் தாங்கள் ஆற்றும் இலக்கியப் பணிக்கு நன்றி. ஆம். கல்கி வெளியிடும் கதைகள்தாம் பண்பும், படிக்கும் தகுதியும் உடையவை. என்னை இலக்கியத்தில் நம்பிக்கையுடையவனாக்குவது கல்கி. இது புகழ்ச்சி இல்லை. உண்மை!
தென்காசி, இ. சிவசுப்பிரமணியன்.



◆ கல்கி, 1.3.92 நெல்லைச் சிறப்பிதழ் படித்தேன். வண்ணார்பேட்டையிலிருந்து வெளி வரும் 'எரிதழல்' பத்திரிகையின் ஆசிரியர் என்று "சுந்தரம்" என்பவரின் பெயரைக் குறிப்பிட்டு அவரின் புகைப்படத்தையும் பிரசுரித்துள்ளீர்கள். அது தவறு. எரிதழல் பத்திரிகையின் ஆசிரியர் கிருபாகரன் என்ற இளைஞர். அவரின் புகைப்படத்தை இத்துடன் இணைத்துள்ளேன்.
வண்ணார்பேட்டை, எம். ஆறுமுகம்.

*(எங்களுக்குத் தவறான தகவல் அளிக்கப்பட்டது அறிந்து வருத்துகிறோம் - ஆர்.)*



# பாலம்

## இந் நூல்கள் இருக்கா?

●● வேதங்கள், உபநிஷதங்கள், வால் மீகி ராமாயணம், மூலம் மற்றும் உரையுடன் நூல்கள் யாரிடமேனும் இருக்குமானால் தொடர்பு கொள்ளவும். ஜோதிடக் கலை பற்றிய நூல்களிலும் எனக்கு ஆர்வம் உண்டு. பி. வி. ராமன் ஆசிரியராக இருந்து நடத்திய Astrological Magazine பழைய பிரதிகள் இருந்தாலும் நலம். என்ன விலை கொடுக்க வேண்டும் என்பதையும் குறிப்பிட்டு எழுதவும்.

*- ஆர். சுவாமிநாதன்,*
*9, கணபதி காலனி,*
*சென்னை - 600 018.*

## நேதாஜி வரலாறு

●● நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின் வாழ்க்கை வரலாறு மற்றும் யுத்த சாகசங்கள் பற்றி நூல் எழுத வேண்டும் என்று எனக்கு விருப்பம். எனவே அவரைப் பற்றிய தகவல்கள் தரும் நூல்கள், கட்டுரைகள், செய்திகள், படங்கள், தவிர, அவரே எழுதிய கடிதங்கள், கட்டுரைகள் முதலியன வைத்திருப்போர் என்னுடன் தொடர்பு கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

*- கரு. முத்துராமலிங்கம்,*
*கல்கி நூலகம்,*
*மீனங்குடி,*
*கடலாடி அஞ்சல் - 623 703.*

## தேவை, ஒரு வேலை!

●● நான் பி. எஸ்ஸி. (கணிதம்) பட்டதாரி. வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தில் பதிவு செய்து ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. வேலை கிடைக்கவில்லை. தகப்பனார் ஓய்வு பெற்று விட்டார். பென்ஷன் பணம் பெரிய குடும்பத்தைச் சமாளிக்கப் போதவில்லை. அன்புள்ளம் கொண்ட யாராவது 28 வயதாகிவிட்ட எனக்கு ஒரு நல்ல வேலை கொடுத்து வாழ்க்கையில் முன்னேற வழி காட்டுவார்களா?

*- எஸ். கார்த்திகேயன்,*
*பிளாட் 79, கனகசபை நகர்,*
*தஞ்சை - 613 007.*

## சுதந்திரப் போராட்டச் சரிதம்

●● 'இந்திய சுதந்திரப் போராட்டத் தின்சரித்திரம்' என்றதலைப்பில் (1857 - 1947) ஆங்கிலத்தில் நூல் எழுதியிருக்கிறேன். இன்னும் அச்சேறாமல் இருக்கிறது. மகாத்மா காந்தியின் வாழ்க்கை வரலாற்றினைத் தயாரிப்பதில் (பல பாகங்கள் கொண்டது) டாக்டர் சுசீலா நைய்யாருடன் சேர்ந்து பணியாற்றிய காலகட்டத்தில் இந்த நூலை எழுதினேன். இதற்கு முன் நாடாளுமன்ற நூலகத்தில் 25 ஆண்டுகள் ஆய்வுத் துறை துணை இயக்குனராக இருந்த அனுபவமும் இந்த நூலை எழுதத் துணை நின்றது. இளம் தலைமுறையினரிடையே தேசிய உணர்வைத் தூண்டும் வகையில் எழுதப்பட்டுள்ள இந்த நூலைப் பிரசுரிக்க விரும்புவோர் தொடர்பு கொள்ள முகவரி :

*- ஆர். சுப்பிரமணியம்,*
*4, தொண்டிவிளாகம் தெரு,*
*கல்லிடைக்குறிச்சி - 627 416.*

## அலர்ஜியால் அவஸ்தை

●● முப்பத்தொன்பது வயதான நான், சுமார் 15 ஆண்டுகளாக அலர்ஜி காரணமாக உருவாகும் தும்மல், மூக்கடைப்பு போன்றவற்றால் அவதிப்படுகிறேன். ஆங்கில, சித்த, ஹோமியோபதி, ஆயுர்வேத மருந்துகள் பயன் தரவில்லை. இதுபோன்ற நோய் இருந்து பூரண குணம் அடைந்தவர்கள் அந்த விவரங்களைத் தெரிவித்தால் நன்றி.

*- ஜி. சங்கரபாண்டியன்,*
*சிறப்பு உதவியாளர்,*
*இந்தியன் வங்கி,*
*ராமசாமி ராஜா நகர்,*
*காமராஜர் (மாவ) - 636 204.*

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி பொறுப்பேற்க இயலாது.)

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி எப்ரல் 1, 1942

### யுத்த நஷ்டங்கள்

"அந்த யுத்தம் மட்டும் இந்தியாவுக்கு வரட்டும்; ஒரு கை பார்த்துவிடுகிறோம்'' என்று நம்மில் சிலர் கச்சத்தை வரிந்து கட்டிக் கொண்டிருக்கிறார்கள். வேறு சிலர் யுத்தத்தின் வருகையை உத்தேசித்துப் பட்டணங்களிலுள்ள தங்கள் தங்கள் ஜாகைகளை ஒழித்து விட்டு விட்டுப் போகிறார்கள். இப்படியெல்லாமிருந்தும், நாளது வரையில் யுத்தம் இந்தியாவுக்கு வந்தபாடில்லை. இப்படி யுத்தம் இன்னும் இந்தியாவை நேராகத் தாக்கவில்லையானாலும், இந்திய மக்கள் பலர் யுத்தத்தின் கஷ்ட நஷ்டங்களை ஏற்கெனவே அநுபவிக்கத் தொடங்கிவிட்டார்கள். மலாய்-பர்மா முதலிய நாடுகளிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கும் இந்திய சகோதர சகோதரிகளைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது. உத்தியோகம் போய், தொழில் போய், இதுவரை சேர்த்திருந்த பணம் உடைமை எல்லாம் போய், உடம்பில் உடுத்த துணி ஒன்றுடன் அவர்களில் அநேகர் தாய் நாட்டுக்குத் திரும்பி வந்திருக்கிறார்கள்.

- என்ன சேதி

### உலகிலேயே பெரிய மனிதர்!

முன்தடவை அமெரிக்கப் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டின் படத்தைக் ''கல்கி'' இதழில் வெளியிட்டபோது, ''தற்சமயம் உலகத்தில் முதல் பெரிய மனிதர் இவர்தான்'' என்று எழுதியிருந்தோம். ''எந்த விதத்தில் பெரிய மனிதர்?'' என்று ஒரு நேயர் கேட்டிருந்தார். உலகத்தில் நூறு கோடி ஜனங்களுக்குமேல் தங்களுடைய வாழ்வையும் சுதந்திரத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்கு இவருடைய கையையே இன்று எதிர்பார்க்கிறார்கள். பிரிட்டன் இவரிடம் பணமும், ஆயுத பலமும் எதிர்பார்க்கிறது; ருஷியா எதிர்பார்க்கிறது; சீனம் எதிர்பார்க்கிறது; துருக்கி எதிர்பார்க்கிறது; ஆஸ்திரேலியா தன்னுடைய பாதுகாப்புக்கே இவரை எதிர்பார்க்கிறது. பிரான்ஸ் இவரிடம் உணவுப் பொருளை எதிர்பார்க்கிறது. கிடைக்கிறதோ, இல்லையோ, எதிர்பார்ப்பதில் குறைவு ஒன்றுமில்லையல்லவா? பிரஸிடெண்டு ரூஸ்வெல்ட்டும் வாயினால் 'இல்லை'யென்று யாருக்கும் சொல்வதில்லை. இப்படிப்பட்டவரை உலகத்திலேயே 'பெரிய மனிதர்' என்று எல்லாரும் சொல்வதில் யாது தடை?

- அட்டைப்பட விளக்கம்



### கிரிப்ஸ் தூது!

தூதர் கிரிப்ஸ் மூலமாக பிரிட்டிஷ் சர்க்கார் அனுப்பியுள்ள திட்டம் இரண்டு பாகங்கள் கொண்டது. ஒன்று, யுத்தத்துக்குப் பிந்தி அமுலுக்கு வரவேண்டிய நிரந்தரமான அரசியல் ஏற்பாடு. இன்னொன்று, யுத்தம் முடியும் வரையில் தாற்காலிக ஏற்பாடு.

யுத்த முயற்சிகளைத் திறமையாக நடத்தி ஜயமடையும் நோக்கத்துக்கு, முதல் பாகத்தைவிட இரண்டாம் பாகந்தான் அதிக முக்கியமானது.

இதைப் பற்றி கிரிப்ஸ் திட்டம் என்ன சொல்கிறது?

சொல்லியிருப்பது ரொம்பக் கொஞ்சம்; அதுவும் தெளிவாக இல்லை.

இந்தியாவின் பாதுகாப்பு உலக யுத்தத்தில் ஒரு பகுதியாம். ஆகையால் அதன் பொறுப்பு மன்னர் பிரானுடைய அரசாங்கத்தைச் சேர்ந்ததாம். (அதாவது பிரிட்டிஷ் மந்திரி சபையைச் சேர்ந்தது என்று அர்த்தம்.) ஆனால், இந்திய சர்க்காரும் ஜனங்களும் இந்தியாவின் ராணுவ பலத்தையும், தார்மிக பலத்தையும், பொருள் பலத்தையும் திரட்டிக் கொடுக்க வேண்டுமாம்!

இதற்கு என்ன அர்த்தம்? பழையபடியே சைன்யத்துக்கு ஆள் திரட்டுதல், யுத்த நிதி வசூலித்தல், விளக்கணைத்தல் ஆகிய காரியங்களை மட்டும் செய்து கொண்டிருங்கள் என்று அர்த்தமா?

முடியாது, ஸார்! முடியாது. இந்த இஷ்கா இஷ்பா விவகாரம் சரிப்பட்டு வராது. இந்தியாவின் பாதுகாப்புப் பொறுப்பைப் பூராவும் இந்திய தேசிய சர்க்காரிடம் ஒப்புவித்து விடுவதுதான் சரி. அப்போதுதான் நீங்கள் வந்த காரியம் கை கூடும். செய்கிறதையெல்லாம் செய்துவிட்டுக் கழுநீர்ப் பானையில் கையை விடுவதில் பிரயோஜனமில்லை.

- தலையங்கம்



## சம்பிரதாயத்தை உடைத்தார்!

● பிரிட்டிஷ் சர்க்காரின் பிரதிநிதியாக வெளிநாடுகளுக்குச் செல்லும் இந்தியர்கள் சாதாரணமாய் பிரிட்டிஷ் ஆட்சியின் புகழை வேண்டிய மட்டும் பாடுவார்கள். காட்டிய இடத்தில் கையெழுத்துப் போடுவார்கள். இந்தத் தடவை அமெரிக்காவுக்குப் போயிருக்கும் ஸர் ஆர்.கே. ஷண்முகம் செட்டியார் மேற்படி சம்பிரதாயத்தை உடைத்திருக்கிறார். இந்திய சர்க்கார் பிரதிநிதியாக அமெரிக்காவில் இராணுவ தளவாடங்கள் வாங்கப்போனவர், அந்தத் தளவாடங்களில் முக்கியமானது இந்தியாவின் சுதந்திரம்தான் என்பதை மறந்து விடவில்லை. நியூயார்க்கில் நடந்த இந்தியர்-சீனர்க் கூட்டத்தில், இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை வற்புறுத்தி, பிரிட்டிஷார் அதிகாரத்தை விட்டுக் கொடுக்கத் தயங்குவதைக் கண்டித்தார். ஸர் ஆர்.கே. ஷண்முகத்தின் சிறந்த வாக்கு வன்மை இம்மாதிரியே எக்காலத்திலும் பயன்பட வேண்டுமென விரும்புகிறோம்.



## முழுநேரமும் சிரிக்க.....

● சென்னை மவுண்ட் ரோட்டில் புதிதாய் அமைத்திருக்கும் குளோப் தியேட்டரில் ஏப்ரல் 4வ. ஆரம்பமாகும் ''கிரேட் கன்ஸ்'' என்னும் படத்தில் ஒரு காட்சி. முக்கிய நடிகர்கள் லாரல் - ஹார்டி. நடுவில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிறவர் ஷீலா ரயன். முழு நேரமும் சிரிக்க வைக்கும் படம்.

## சிலப்பதிகாரம் (பத்தினி) தெலுங்கு டாக்கி

சிறந்த தமிழ்க் காவியம் ஒன்றின் கதையைத் தெலுங்கு டாக்கியாகக் கொண்டு வந்த விஷயத்தில் டைரக்டர் ராமப்பிரஹ்மத்துக்குத்தமிழர்கள் கடமைப்பட்டிருப்பதோடு, அதை இவ்வளவு உயர்தரமாகக் கொண்டு வந்திருப்பது பற்றி இரண்டு மடங்கு கடமைப்பட்டிருக்கிறார்கள். ஏனென்றால், டாக்கி டைரக்டர்கள் மட்டும் மனது வைக்



பாரதி : கண்ணகி

கும் பட்சத்தில் எப்பேர்ப்பட்ட கதையாயிருந்தாலும், குட்டிச் சுவராக அடித்துவிடக் கூடும் என்பதை நாம் அறிவோம். இது விஷயத்தில் டைரக்டர்களின் சாமர்த்தியத்துக்கு எல்லையே கிடையாதென்பதைப் பார்த்திருக்கிறோமல்லவா? இராமாயணமும் பாரதமும் படும் பாட்டில் மற்றக் கதைகளெல்லாம் எந்த மூலை?

## ஏமாற்றமில்லை!

மியூஸிக் அகாடமி என்று வழங்கும் சங்கீத வித்வத் சபையில் ஸ்ரீ முத்து ரங்க முதலியார் தமிழ்ப் பாட்டு இயக்கத்தைப் பற்றிய முக்கிய தீர்மானத்தைப் பிரேரணை செய்தார் :

''பெரும்பாலான தமிழ் மக்களின் விருப்பத்தை முன்னிட்டு, அகாடமியின்



ஆதரவில் நடக்கும் சங்கீதக் கச்சேரிகளின் புரோகிராமில் கூடியவரை தகுந்த தமிழ்ப் பாட்டுக்களைச் சேர்க்க ஏறுபாடு செய்ய வேண்டும்.''

ஸ்ரீ முதலியார் இந்தத் தீர்மானத்தைக் காரண காரியங்களுடன் ஆதரித்து வெகு விஸ்தாரமாகப் பேசினாராம். என்ன பயன்? எல்லாம் கர்னல் அமெரியின் காதில் ஊதிய சங்காகவே முடிந்தது. தீர்மானம் தோற்றுப் போயிற்று.

ஸ்ரீ முதலியாரின் முயற்சி இவ்விதம் தோல்வியடைந்தது குறித்து எனக்குச் சிறிதும் ஏமாற்றமில்லை. ஏனெனில் வேறெந்த முடிவையும் நான் எதிர் பார்க்கவில்லை.



## இசை விருந்து

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் இசைத்தட்டு ஒன்று வெளியாகிறதென்றால், அதை ஒரு சங்கீத உற்சவமாகக் கொண்டாடுவது இசை உலகில் வழக்கமாகி விட்டது. 'ஸரகுன பாலிம்ப ஸமயமுரா' என்னும் கேதார கௌள கீர்த்தனத்தை ஸ்ரீமதி எம்.எஸ். இந்த நெ. 18685 பிளேட்டில் பாடியிருக்கிறார்.

பல்லவியில் ''ஸரி எவ்வரு'' என்னுமிடத்திலும், சரணத்தில் ''காத்ஸலேதா'' என்னுமிடத்திலும் விழுந்திருக்கும் சங்கதிகளை ஒரு தடவை கேட்டு விட்டால், மீண்டும் மீண்டும் ஆயிரந் தடவை கேட்க ஆசை உண்டாகும். நல்ல வேளையாக இது இசைத் தட்டாயிருப்பதால், திரும்பத் திரும்பக் கேட்பதற்குத் தடை எதுவும் இல்லை. சரணத்தின் முடிவில் இரண்டாங் காலத்தில் பாடியிருக்கும் சிட்டா ஸ்வரம் அபரிமிதமான துரிதத்துடன் போகிறது. இவ்வளவு வேகத்திலும் ஸ்வரங்கள் ஒன்றோடொன்று கலந்து விடாமல் அதனதன் ஸ்தானத்தில் மாதுளம் பழத்திலுள்ள முத்துக்களைப் போல் தனித் தனியாக ஜ்வலிக்கின்றன.

- ஆடல்பாடல் - 'கர்நாடகம்'

# ரங்காராவ் அளித்த ஏமாற்றம்!

என் இயக்கத்தில் வெளியான முதல் படம், 'கல்யாணப் பரிசு' சென்னை, காஸினோ தியேட்டரில் திரையிடப்பட்டது என்று முன்பே கூறினேன். அப்போது அங்கே ஆங்கிலப் படங்கள்தான் திரையிடப் படும். அன்றைய காஸினோ தியேட்டர் மானேஜர் சங்கர். அவரிடம் என் படத்தைப் பார்க்குமாறு கேட்டுக் கொண்டேன். ''நான் வெளிப்படையாப் பேசறேன். எனக்குப் படத்தை ரிலீஸ் பண்ண தியேட்டர் கிடைக் கலே; நீங்க என் படத்தைப் பாருங்க. பிடிச் சிருந்தா இங்கிலீஷ் படங்கள்தான் போடற துங்கிற கொள்கையை மாற்றிக்கிட்டு என் படத்துக்கு சான்ஸ் கொடுங்க'' என்றேன். படத்தைப் பார்த்த சங்கருக்குப் படம் ரொம்பப் பிடித்துப் போகவே சம்மதித்தார். அது எவ்வளவு சரியான முடிவு என்பதற்குப் படத்தின் வசூலே சான்றாக அமைந்தது. அதன் பிறகு என் படங்கள் எதுவானாலும் காஸினோவில் ரிலீஸ் ஆகும். சிலர் என்னிடம், ''என்னங்க காஸினோவை விலைக்கு வாங்கிட்டீங்களா?'' என்று கூடக் கேட்டிருக்கிறார்கள்!

பொதுவாக தியேட்டர் மானேஜர்கள் 'ஆடியன்ஸ் ரியாக்ஷனை' நேரடியாகப் பார்ப்பவர்கள் ஆதலால், மக்களின் ரசனையை நன்றாகப் புரிந்து வைத்திருப் பவர்களாகக் கருதப்படுகிறார்கள். படத்தை முன்கூட்டியே பார்த்தால் 'இத்தனை வாரம் ஓடும்' என்று கிட்டத்தட்ட சரியாகவே அவர் களால் கணித்து விட முடியும்.

அந்த நாளில் தியேட்டர் வாடகை ஒரு வாரத்துக்கு நாலாயிரம் ரூபாய். அதில் ஆயிரம் ரூபாய் அட்வான்ஸாகத் தர வேண் டும். எத்தனை வாரம் ஓடும் என்று கணித்து அத்தனை வாரத்துக்குரிய அட்வான்ஸ் தர வேண்டும்.

காஸினோ தியேட்டர் மானேஜர் சங்கர் எனது 'நெஞ்சில் ஓர் ஆலயம்' படம் பார்த்த பிறகு, ''எத்தனை வாரங்களுக்குத் தியேட்டர் வேண்டும்?'' என்று கேட்டார். நான் ஒரு முழு நோட்டுக் கட்டை எடுத்து அவர் கையில் வைத்து, ''அட்வான்ஸ்'' என்றேன். ''என்ன, பத்தாயிரம் கொடுத்திருக்கீங்க?'' என்றார் அவர் திகைப்புடன். ''பத்து வாரத்துக்கான அட்வான்ஸ்'' என்றேன்.

''உங்களுக்கென்ன பைத்தியமா? படம் மூணு வாரம்தான் ஓடும்'' என்று கூறிய சங்கர், நோட்டுக்களை எண்ண ஆரம்பித்து, கட்டுப் பிரித்து, ஏழாயிரத்தைத் திரும்ப என் பக்கம் நீட்டினார். நான் வாங்கவில்லை. ''சங்கர், படம் பத்து வாரமாவது குறைந்த பட்சம் ஓடணும் என்பது என் ஆசை. நீங்க நினைக்கிற மாதிரி மூணு வாரம்தான் ஓடுதுன்னாலும் மொத்த தியேட்டர் வாடகை பன்னிரண்டாயிரம் ஆகிறதில் லையா? அதனால் பணம் உங்ககிட்டயே இருக்கட்டும். அப்புறம் கணக்குப் பார்த் துக்கலாம்'' என்றேன். நெஞ்சில் ஓர் ஆலயம் வெள்ளி விழா கொண்டாடியது!

இதற்கு நேர்மாறாக, நான் எடுத்த 'அவ ளுக்கென்று ஓர் மனம்' படத்தைப் பார்த்த நண்பர்களும் தியேட்டர் மானேஜர்களும் ''இது இன்னொரு 'நெஞ்சில் ஓர் ஆலயம்'! பிரமாத சக்ஸஸ் ஆகப் போகிறது'' என்றார்கள். படம் ரொம்ப சுமாராகத்தான் ஓடியது.

எதற்குச் சொல்ல வருகிறேன் என்றால், என்னதான் திரை உலகில் பலவித நம்பிக் கைகளும் திறமைகளும் இருந்தாலும், ஒரு படத்தின் வெற்றி தோல்வியை மட்டும் அந்த உலகைச் சேர்ந்த யாராலும் நிர்ணயிக்க முடியாது. அதன் ஆயுட் காலத்தைத் தீர்மா னிக்கும் பிரும்மா, திருவாளர் ரசிகர்தான்!

எனக்கு மிகவும் நெருங்கியவர்களான எம். எஸ். விஸ்வநாதனுக்கும் ஆர்ட் டைரக் டர் கங்காவுக்கும் ஒரு படம் பண்ணித் தர நான் விரும்பினேன். இதை அவர்களிடம் தெரிவித்ததும் ரொம்ப மகிழ்ச்சி அடைந் தனர். ஆர்ட் டைரக்டரும் இசை அமைப்பா ளரும் தயாரிப்பாளர்களாக இருந்து உருவா கும் படம் என்பதால் பிரமாத செட்கள் அமைய வேண்டும் என்றும், இசையும் இளா மைகலாக இருக்க வேண்டும் என்றும், இதற்கேற்ப அற்புத மான கதை உருவாக வேண்டும் என்றும் எம். எஸ். வி. கூறினார். அதன்படி நான் எழுதிய கதைதான் 'கலைக் கோயில்'. டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றேன்.

படத்தில் ஒரு முக்கியமான கதாபாத்திரத்துக்கு





'கலைக் கோயில்' படத்தில் முத்துராமன், சந்திரகாந்தா

ரங்காராவை ஒப்பந்தம் செய்ய விரும்பினேன். ஆனால் 'ரங்காராவ் ஷூட்டிங்குக்கு நேரத்தோடு வர மாட்டார்; தாமதம் செய்வார்' என்பதாகத் திரையுலக வட்டாரத்தில் பேச்சு உண்டு. அதனால் ரங்காராவை என் அலுவலகத்துக்கு வரவழைத்துப் பேசிய போது, நடிப்பதற்கு அவரது மகிழ்ச்சியான ஒப்புதலைப் பெற்ற கையோடு, ''ஷூட்டிங்குக்கு நேரம் தவறாமல் வந்து விட வேண்டும். தாமதங்களைத் தவிர்க்க முடியாது என்றால் இப்போதே சொல்லி விடுங்கள்'' என்றும் சற்று கண்டிப்பான குரலில் கூறினேன். காலதாமதங்கள் இருக்கும் என்றால் அவரை ஒப்பந்தம் செய்ய நான் விரும்பவில்லை என்பதைத் தெளிவாக்கினேன்.

நேரடியாக இப்படி நான் பேசியதும் ரங்காராவ், ''அதைப் பத்தி நீங்க கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம்; ஒன்பது மணிக்கு ஷூட்டிங் என்றால் எட்டு ஐம்பதுக்கே நான் செட்டில் இருப்பேன்'' என்றார். என்னை விட வயதில் மூத்தவரான அவரை நம்பி, ஒப்பந்தம் செய்தேன்.

**க**லைக்கோயில் படத்துக்கான பூஜைக்கு நாள் குறிப்பிடப்பட்டது. 'நல்ல நேரம் காலை ஆறரை மணி' என்று சாஸ்திரிகள் குறித்துத் தந்திருந்தார். எல்லாரும் ஆறு மணிக்கே ஆஜர் - ரங்காராவைத் தவிர! மணி ஆறே முக்கால் ஆயிற்று; ஏழாயிற்று... அவர் வரவேயில்லை! பூஜையை உரிய நேரத்துக்குள் முடித்து விட்டு அவருக்காக மறுபடி காத்திருந்தோம். மணி ஒன்பது. படப்பிடிப்பு இன்னும் தொடங்கவில்லை! ரங்காராவும் வரவில்லை. அவர் வீட்டுக்கு ஃபோன் செய்து கேட்டோம். ''ஏழு மணிக்கெல்லாம் கிளம்பிப் போய் விட்டாரே'' என்று சொன்னார்கள்.

எனக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. எம்.எஸ்.வி., கங்கா இருவரையும் அழைத்தேன். ''ரங்காராவை நீக்கி விடலாம்'' என்றேன். அவர்கள் அதிர்ச்சி அடையத்தான் செய்தார்கள். ஆனால் என் பக்கம் நியாயம் இருந்ததால் அவர்களால் மறுப்புக் கூறவும் முடியவில்லை.

**'ர**ங்காராவ் ரோலில் யாரைப் போடுவது?' என்ற அடுத்த கேள்வி எழுந்தது. ''எஸ். வி. சுப்பையாவை நடிக்க வைத்தால் என்ன?'' என்றேன். தயாரிப்பாளர் இருவரும் என் கருத்தை ஏற்றனர். டெலிஃபோனில் சுப்பையாவுக்கு விஷயத்தைச் சுருக்கமாக விளக்கி விட்டு, ''கார் அனுப்புகிறேன்; புறப்பட்டு வாங்க; மற்ற விஷயங்களை அப்புறம் பேசிக்கலாம்'' என்றேன். ஃபோனிலேயே சுப்பையாவின் சம்மதத்தைப் பெற்றதும், அவரை அழைத்து வரக் கார் புறப்பட்டுச் சென்றது.

சிறிது நேரத்தில் என் யூனிட்டைச் சேர்ந்த ஒருவர் என்னிடம் பரபரப்பாக ஓடி வந்தார். ''ஸார், சுப்பையாவுக்குக் கார் அனுப்பியிருப்பதாக இப்பத்தான் எனக்குத் தெரியவந்தது. ஆனா, சுப்பையா தாடி ஒட்டிக்கொண்டு நடிக்கமாட்டாரே!'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

''அடடா, அப்படியா! இப்போ என்ன செய்வது?'' என்று கவலையோடு கேட்டார் கங்கா. காரணம், கங்கா ஒவ்வொரு கதாபாத்திரமும் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு 'ஸ்கெட்ச்' போட்டிருந்தார். அதிலே முதியவர் பாத்திரத்துக்கு தாடி வரைந்திருந்தார். அதை நானும் ஓ.கே. செய்திருந்தேன்.

ஆக மொத்தம், தாடி ஒரு பிரச்னையாகி விட்டது. அது எப்படி தீர்ந்தது? அடுத்த வாரம்!

டைரக்டர் ஸ்ரீதர்

படங்கள் உதவி :

பிலிம் நியூஸ் ஆனந்தன்



# சிலர் இரும்பை விழுங்கி ஏப்பம் விடுவது எப்படி?

●● கே. மணி, நெய்வேலி

Photo Allergy எனப்படும் சரும நோயைக் குணப்படுத்த முடியாதா? இதனால் பாதிக்கப்பட்டவர்கள் வாழ்நாள் முழுவதும் மாத்திரை, ஆயின்ட்மென்ட்டை உபயோகப் படுத்தி, தற்காலிக நிவாரணம்தான் அடைய முடியும் என்பது உண்மையா? இதற்குத் தீர்வு ஏதாவது உண்டா?

●● டாக்டர் நமச்சிவாயம் :

● Photo Allergy என்பது நமது தோலிலே உள்ள பிக்மென்டின் (pigment) அழற்சியினால் ஏற்படக்கூடிய ஒரு பாதிப்பு. இதனால் சூரிய ஒளியிலுள்ள அல்ட்ரா வைலட் கதிரானது அதிகமாக ஊடுருவுவ தால் சருமத்தில் ஒருவிதமான 'டெர்ம டைடிஸ்' (Dermatitis) உண்டாகிறது. காலப் போக்கில் இவ்வித மாறுதல் அதிகமாக ஏற்பட்டு, அதுவே புற்று நோயாக மாறவும் வாய்ப்பு உண்டு. இதனைத் தவிர்க்க ஏற்ற வகையில் ஆலோசனை வழங்குகிறோம். நிரந்தரத் தீர்வு என்பது அலர்ஜி ஏற்படுத்தும் விஷயத்தைத் தவிர்ப்பதுதான்.

● எம்.கே. சக்திவேல், சேலம்

வழக்கத்தைவிட சற்று அதிகமாகச் சாப்பிட்டால் வயிறு 'கடாபுடா' என்கிறது. ''சைக்கிளை நொறுக்கிச் சாப்பிட்ட மனி தர்'', ''கண்ணாடியைக் கடித்துப் சாப்பிட் டார்'' என்ற செய்திகள் ஆச்சரியமாக இருக் கின்றன. இவை எப்படி ஜீரணமாகின்றன. இதனால் உடலில் பாதிப்பு என்ன ஏற்படும்?

●● டாக்டர் தட்சிணாமூர்த்தி:

மனிதக் குரங்குகள், சாப்பிடும் ஆகா ரத்தை அவசர அவசரமாக உட்கொண்டு, கீழ்த்தாடைப் பையில் வைத்துக் கொண்டு பிறகு சாவகாசமாக உட்கொள்ளும். அது போலச் சில மனிதர்களுக்குக் கீழ்த்தாடைப் பை இயல்புக்கு அதிகமாக அமைந்திருக் கும். மற்றவர்கள் முன்னிலையில் பிறரால் உண்ண முடியாத பொருள்களை உட் கொண்டு அதிசயத்தில் ஆழ்த்துவர். கூட்டம் கலைந்தபின் அவர்கள் எப்படி அவற்றை வெளியே எடுக்கிறார்கள் என்பதைப் பார்க்க நமக்கு வாய்ப்பில்லை. அதிசயத்துடன் திரும்பி விடுகிறோம்.

● ஐ.எஸ். வாசு, மாடம்பிள்ளைதர்மம்

வைட்டமின் 'பி' (B) பற்றாக்குறை, உணவில் அகத்தம் (Fungus), ஹார்மோன்கள் ஏற்றத்தாழ்வு, பழைய டூத் பிரஷ் உபயோ கிப்பது, வயிற்றுப்புண் என்று பல கார ணங்கள் வாய்ப்புண்ணுக்குக் கூறப்படுகின் றனவே இவை சரியா?

பிரதான காரணம் வைட்டமின் 'B' பற்றாக்குறை. சமையலில் அதிகமாக வேக விடுவதால், உணவிலுள்ள வைட்ட மின் 'B' யை இழந்து விடுகிறோம்.

சராசரி மனிதனுக்கு Fungus எனும் அகத்தத்தால் பாதிப்பு ஏற்படுவதில்லை. மற்ற நோய்கள் உடம்பைப் பாதித்து, அத னால் ஏற்படும் மிகுந்த உடல் தளர்ச்சியின் போதுதான் Fungus தன் வலிமையைக் காட்டும்.

ஹார்மோன்கள் ஏற்றத்தாழ்வும் நேரடி யாக வாய்ப்புண்ணை ஏற்படுத்தாது. ஆனால் ஹார்மோன் ஏற்றத்தாழ்வால் ஏற்படும் இதர உபாதைகளின் விளைவாக வாய்ப்புண் ஏற்பட வாய்ப்புண்டு.

முன்பெல்லாம் தினமும் ஒரு வேப்பங் குச்சியைப் பல் துலக்கிய பின் தூக்கி எறிந்து விடுவார்கள். இப்போதோ ஒரே டூத் பிரஷ்ஷைப் பலமாதங்களுக்கு உபயோகிக் கிறார்கள். இது தவறு. பிரஷ்ஷை அவ்வப் போது புதுப்பிக்க வேண்டும். பிரஷ்ஷின் முளைகள் நேராக வளைவின்றி இருக்க வேண்டும். வேர் பகுதியில் அழுக்குப் (Fungus) பாசி பிடிக்காமலும் இருக்க வேண் டும். இல்லாவிட்டால் பற்கள் பாதுகாப் புக்குப் பயன்படும் பிரஷ் ஈறு உபாதை களுக்குக் காரணமாகி வாய்ப்புண்ணும் வரக் கூடும். பிரஷ்ஷை உபயோகப்படுத்தும் போது மேல் பல்லை மேலிருந்து கீழாக வும், கீழ் வரிசைப் பல்லைக் கீழிருந்து மேலாகவும் தேய்க்க வேண்டும்.

வாய்ப்புண்ணானது வயிற்றுப்புண் ணுக்கு அறிகுறியாகவும் இருக்கலாம். நம் வயிற்றில் சுரக்கும் அமிலம் அதிகரிப்பதால் ஏற்படும் தீமை இது.

தொகுப்பு : பா.ரா.



# தங்க மனசுக்காரன்

தமிழ் சினிமாவில் கதைப் பஞ்சம் எந்த அளவுக்குக் கடுமையாக இருக்கிறது என்பதைத் திரும்பவும் உறுதிப்படுத்துகிறது 'தங்க மனசுக்காரன்.'

ஒரே மாதிரியான கிராமியக் கதையை வைத்துக் கொண்டு, அதில் ஒரு வித்தியாசத்தைப் புகுத்துவதற்காகக் கதாசிரியர் பயன்படுத்தியிருப்பது - பில்லி, சூனிய, ஏவல் வேலையை!

அதென்ன, சடைச்சாமி நம்பியார் ஏதோ மந்திரம் சொல்லி எதையோ அக்கினியில் போட்டவுடன் எங்கோ இருக்கும் சிவரஞ்சனிக்கு வயிற்று வலி வந்து விடுகிறது!

வலியில் துடிக்கும் அவருக்கு மோரில் எதையோ கரைத்துக் கொடுக்கவும், அதைக் குடிக்கும் சிவரஞ்னியால் அடுத்த கணமே முரளியை அடியோடு மறந்து விட முடிகிறது!

என்னதான் சினிமாக் கதை என்றாலும், இந்தக் காலத்திலுமா இப்படி!

கதை, திரைக்கதை, வசனம் மூன்றுக்குமே பொறுப்பு ஏற்றிருப்பவர் புதிய இயக்குனர் ராஜவர்மன்.

சிவரஞ்சனி கச்சிதம். எல்லா வகையிலும். அனுபவம் கூடக் கூட மெருகேற நிறைய வாய்ப்பு.

கதாநாயகன் என்றாலும் முரளிக்குப் போதிய சந்தர்ப்பம் இல்லை. வசூலுக்குத் தேவைப்படும் சண்டைக் காட்சிகளில் முனைப்புடன் இயங்கியிருக்கிறார்.

இரண்டே காட்சிகளில் தோன்றினாலும் சடைச்சாமி நம்பியாரிடம் பிரதிபலிக்கிறது பழுத்த அனுபவம். கொசுவை அடிக்க இப்படியொரு யானை தேவையா? இவ்வளவு சீனியரான ஒரு நடிகர் தாம் ஏற்கும் பாத்திரத்தின் பரிமாணம் என்ன என்பதை எப்படி சிந்திக்காமல் விட்டார்?

கதாநாயகன் ஒரு பாடகன். படத்திற்கு இசையமைத்திருப்பவர் இளையராஜா. ஆகவே, பாடல்களுக்குப் பஞ்சமில்லை. அவற்றின் இனிமைக்கும் குறைவில்லை. ஆதாரமாக மட்டுமின்றி ஆறுதலாகவும் இருப்பது அதுதான்.

கதைக்கு ஒட்டாத கவுண்டமணி- செந்தில் நகைச்சுவை... மக்களின் ரசனை இது தான் என்றால், அது பரிதாபத்துக்குரிய சமாசாரம்.

**- சி. ஆர். கே.**

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4292
Registered as Newspaper in Srilanka